# பசு பராமரிப்பின் நற்பயன்கள்

## (உண்மை நிகழ்ச்சிகள்)

## Go Sevā Ke Camatkāra (Tamil)





தொகுப்பாசிரியர்

ஸ்ரீஹநுமான் பிரசாத் போத்தார்

# பசு பராமரிப்பின் நற்பயன்கள்

## (உண்மை நிகழ்ச்சிகள்)






தொகுப்பாசிரியர்

**ஸ்ரீஹநுமான் பிரசாத் போத்தார்**

ஸ்ரீஹரி:

*முதல் பதிப்பு 1991: 6000 பிரதிகள்*

விலை: ரூ. 3. 50

தமிழில்: ர. சௌரிராஜன் ('சௌரி')

**Also available at**

GOPAL SEVA TRUST
82 Krishna Talkies Road
ERODE—638001
Phone : 71202, 61668

வெளியிடுபவர்: கோவிந்தபவன் காரியாலயம்,
கீதா பிரஸ், கோரக்புர். (உ.பி.)

*பதிப்பாளர்: கீதா பிரஸ், கோரக்புர்-273 005.*

"ஸ்ரீ ஹரி:"

# பசு பராமரிப்பின் நற்பயன்கள்

## விண்ணப்பம்

வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்களின் பெருமை அளவிலாதது. பழங்காலந் தொட்டுத் தற்காலம் வரையிலான இலக்கியங்களிலும் பொதுஜன வாழ்க்கையிலும் பசுக்களைப் போற்றிப் பராமரிக்கும் வழக்கம், அங்கிங்கெனாதபடி, எங்குமாக நிலவி வந்திருக்கிறது.

எனவே, இந்நாட்களைப்போல அல்லாமல், அந்நாட்களில் அனைவருமே பசுபராமரிப்புச் சீலர்களாகத் திகழ்ந்தார்கள். மேலும், அவர்களிடம் இருந்த பசுக்களோ கணக்கற்றவை. அதனால் ஆவினம் ஆவின் பொருட்கள், நல்லுணவு, அமைதி-ஆனந்தம், செல்வச்செழிப்பு நாடு முழுதும் நிறைந்திருந்தன. பாரே அதிசயிக்க, பாலும் நெய்யும் பிரவாகமாக, பாரதமெங்கும் பெருக்குற்று வந்திருக்கிறது.

தற்காலம் போதாதகாலம். நவீன நாகரீகத்தின் படாடோபத்தினால், சாத்துவிகத்திலிருந்து பிறழும் மனத்தவர், பசுவிடம் பாராட்ட வேண்டிய பக்தியில் பாராமுகமாகிக் கொண்டு இருக்கிறார்கள். பசுபராமரிப்பே புறக்கணிக்கப்பட்டு வருகிறது; பசுக்களின் எண்ணிக்கையும் தேய்பிறையாகிக் கொண்டு வருகிறது. இதன் விளைவால், நாடெங்கும் பசி-பஞ்சம்-பிணி பரவிக்கொண்டு வருகின்றன; பொதுமக்களிடையே, கொடுமை, கோபம், பேராசை மற்றும் போதை தலை விரித்தாடிக் கொண்டு இருக்கின்றன; நாடெங்கும் அமைதியின்மை சூழத்தொடங்கி இருக்கிறது.

தொன்றுதொட்டே, ஆநிரைச் சேவையின் அற்புதத்தால் பற்பல நற்பலன் கிடைத்து வந்திருக்கிறது. அவைகளில், பயனுள்ள சில பகுதிகளை மட்டும் தொகுத்து, உலகநலன் கருதி, சிறு நூலாக வெளியிடுகிறோம்! இந்நூலைப் படித்தால், பொது மக்களின் போக்கிலே மாற்றம் ஏற்படும் என்று நம்புகிறோம். அப்படிப்பட்ட ஏற்றம் மிக்க மாற்றம் ஏற்படின், "கோதேவதை" மற்றும் "கோவிந்தனின்" அருளுக்கும் நாம் பாத்திரமாகி விட்டோம் என்று பூரிப்படைய வேண்டும்.

—வெளியிடுவோர்.

# பொருளடக்கம்

# கறவை காப்பு - தற்காப்பு

**எழுதியவர்: டாக்டர் மோகன்**

**(ஆநிரையைக் காத்ததனால், கழுத்துக்கு வந்த கயிற்றில் இருந்து காப்பாற்றப்பட்ட பெரியவர், என் தந்தையார் ஸ்ரீஜதீராமணஜீயிடம் சொன்ன உண்மைச் சம்பவம் இது. அவரது உணர்ச்சியை மனதிற்கொண்டு தத்ருபமாக, என் வார்த்தைகளில் இங்கே கூறுகிறேன். -ஆசிரியர்)**

கி.பி.1857 ஆம் ஆண்டு முதல் சுதந்திரப் போராட்டத்தால் பாரதம் முழுதும் கிளர்ச்சி; இதற்கு டில்லி மையம், ஒவ்வொரு சந்துபொந்தும் சவமேடாகிக் கிடந்தது; கால் வைக்கும் இடமெல்லாம் குருதி வெள்ளம் பெருக்கோடியது; போராட்டக்காரர்கள், 'நல்லவர்-பொல்லாதவர்' என்ற எந்த வரையறையையும் பாராட்டவில்லை.

நான் போராட்டக்காரரின் தலைவன். காலை முழுதும் கொள்ளை-களவில் ஈடுபட்டதால், உடல் சோர்வுற்று இருந்தது; எலும்புகள் வாட்டமுற்று இருந்தன. பசியின் ஆதிக்கத்தால் கண்களில் ஒளி மங்கிக் கிடந்தது.எங்கள் காற்சட்டை-மேற்சட்டை பைகளிலும் படைப்பையிலும் பணமும் பொருட்களும் இருந்தனவே ஒழிய, உணவு ஏதும் இல்லை! சிறுகுடலை பெருங்குடல் மென்று முழுங்கிக் கொண்டு இருந்தது.

நாங்கள் எல்லோரும் இஸ்லாமியர்கள்: உணவிற்காக துடிதுடித்துக்கொண்டு இருந்தோம். போராட்டக்

காரரின் பயத்தால் கடைத்தெருவும் அடைபட்டு இருந்தது. வீடுகள் தாழிடப்பட்டு இருந்தன! களைத்து நாற்சந்தி ஒன்றில் கூடினோம். என்னையும் சேர்த்து ஐவர். நான் அவர்களுக்கு வழிகாட்டி. என் முழு பலத்தையும் பயன்படுத்தியதால், மேற்கொண்டு ஓரடி கூட எடுத்துவைக்க முடியாமல் தளர்ந்து போயிருந் தேன்.

அந்நாற்சந்தியின் ஓர் மூலையில் இருந்த மேட் டுப்பகுதியின் ஓரமாக இளைப்பாறத் தொடங்கினேன். தோழர்களிடம் கூறினேன், ''எங்கிருந்தாவது உண வுக்கு ஏற்பாடு செய்யுங்கள்: இல்லையென்றால் இக்கூட்டை விட்டு உயிர் போகத் துடிக்கிறது'' பசிப்பிணி பாதிக்கத் தொடங்கியது! என் நிலைமை யைக் கண்டு, தோழர்கள் உணவிற்காக வெளியே புறப்பட்டார்கள்.

சிறிது நேரத்திற்கெல்லாம், கொழுகொழுவென்று இருந்த ஓர் பசுமாட்டை நால்வருமாக சேர்ந்து இழுத்து வருவதைப் பார்த்தேன். அந்த அப்பாவிப் பசு, எப்படி இந்த மாமிசம் புசிப்பவர்களின் கைகளில் பிடிபட்டது என்று என்னால் எண்ணிக்கூட பார்க்க முடியவில்லை! அதன் கழுத்தில் ஒருவன் தன் தலைப்பாகையை மாலையாக்கியிருந்தான். என்னிடம் கருத்து ஏதும் கேட்காமலே....என் விருப்பத்தை நானாகவே கூற நினைத்ததையும் கேட்காமலே, கதறிக்கொண்டிருந்த பசுவின் கால்களை கட்டிப் போட்டு அப்படியே தரையில் தோழர்கள் சாய்த்தார் கள். போராட்டத்தின் மும்முரத்தில் கிளர்ச்சிக்காரர் இஸ்லாமியரிடம் இருந்து, பேசத்தெரியாத பசுவைக் காப்பாற்ற யாருக்கு நேரமிருந்தது? அந்த நாட்களில்

தர்மவான்கள், கறவைக்காப்பைப் பற்றி தொடர் சொற்பொழிவு நிகழ்த்தக்கூடியவர்கள், நேர்மையற்றவனின் சவமேடைபோல், மேட்டுப்பகுதிகளில் கை விரித்து, பணஞ்சேர்ப்பவர்களாகி, மூச்சடக்கி முட்புதர்களிலே மறைந்து வாழ்ந்தார்கள்! ஏற்பட்டிருந்த ஆபத்திலிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்ள மானசீகமாக இறைவனிடம் வேண்டலானார்கள்! இங்கோ... பசு சுருண்டு கிடந்தது! கண்களில் இருந்து தாரைதாரையாக கண்ணீர் பெருகிக் கொண்டு இருந்தது; பசி தாளமுடியாமல் நான் துடிதுடித்துக் கொண்டு இருந்தேன்; என் அங்கமெல்லாம் ஓய்ந்து கிடந்தன!

பசுவைத் தெய்வமாக மதித்து வழிபடுதல் என் மதத்திற்குப் புறம்பானது. ஆனால், ஒரு பாவமும் செய்தறியாத பசுவைச் சுற்றி இருந்த அந்த ஓநாய்களைக் கண்டும், இன்னும் சிறிது நேரத்தில், வயிற்றில் அதன் மாமிசத்தை ஜீரணமாக்க பட்டை தீட்டிக் கொண்டிருந்த அந்த ஆயுதத்தைக் கண்டும், என் உள்மனம் நடுநடுங்கியது. பசு சினைப்பட்டிருந்தது. அதைப் பார்க்கும்போதே, என் ஊரில் விட்டுவிட்டு வந்திருக்கும் என் கருவுற்ற மனைவியின் ஞாபகம் எனக்கு வந்தது. நான் நிலைக் கலங்கி போனேன்.

திடீரென்று எனக்கொரு யோசனை தோன்றியது. எப்படியோ சமாளித்தவாறு எழுந்து கொண்டேன். தோழர் குழாமை நெருங்கினேன். கூறலானேன், ''பசியால் என் உயிரே போய்க்கொண்டு இருப்பது உங்களில் எவருக்குமே தெரியவில்லையா? இதுவரை உங்கள் தலைவனின் வயிற்றுப் பசியைத் தீர்க்க ஆயத்தங்கள் செய்வதில் ஏன் இத்தனை மெத்தனம் நீங்கள் காட்டுகிறீர்கள்? ம்...ம்... உடனே சென்று

விறகு மற்றும் உப்பிற்கான வழி செய்து வாருங்கள்! அதுவரை ஆகவேண்டியவற்றை நான் பார்த்துக் கொள்கிறேன்! பசுவைத்தான் கட்டிப்போட்டு விட்டீர் களே... பிறகென்ன?... நான் மட்டும் தனியாக இருந்தால் கூடப்போதும்! பசியால் நான் மிகவும் பயந்து போய் இருக்கிறேன்...விரைவாக ஆக வேண் டியதை கவனியுங்கள்!''

முதலிலேயே விறகுக் கட்டையும் உப்பையும் அவர்கள் கொண்டுவர மறந்தது, இவ்வுலகத்தைப் படைத்த ஆண்டவனின் அருள்தான்! ஒருவேளை இவ்விரண்டையும் அவர்கள் கையோடு கொண்டு வந்திருந்தால், என் உத்தி பலித்திருக்காது. ஆண்ட வன் அவமானத் தலைகுனிவில் இருந்து என்னைத் காப்பாற்றினான்! என் வார்த்தையை செவிமடுத்து என் தோழர்கள் புறப்பட்டார்கள்''

என் தோழர்கள் புறப்பட்டு விட்டார்கள் என் பதை ஊர்ஜிதப்படுத்திக் கொண்டேன். கோமகளை கண்டதுண்டமாக்க, உறையினின்று எடுத்து வைக்கப் பட்டிருந்த நீள் வாளினால் அதன் கழுத்தில் கட்டப்பட் டிருந்த கயிற்றை அறுத்தேன். கோமகள் எழவில்லை! தட்டிக் கொடுத்தேன்! அப்போதும் எழவில்லை! முந்தும் பசியால் உறைந்து போயிருந்த சக்திகளை ஒன்று திரட்டி உந்தினேன்! பலனில்லை! கதறிய கதறலில் பசு களைத்திருந்தது ஒரு காரணம். இன்னொன்று என் செயல்களில் கோமகளிற்கு எந்த நம்பிக்கையும் இல்லாமல் காட்சி அளித்தது. அன் போடு தடவிக் கொடுத்தேன்! முகத்தை மெல்ல நீவினேன்! பசுமகள் எழுந்து நின்றாள்! மூரி நிமிர்ந் தாள்; மூச்சு விட்டாள்; ''நீ செய்த உதவிக்கு

நிச்சயமாகப் பதில் உதவி செய்வேன்'' என்று பார்வையில் நன்றியுணர்வு தெறிக்க, உணர்ச்சிப் பிழம்பாய் ஒருகணம் நின்றாள்; மறுகணம் மறைந்தாள்.

புறப்பட்ட தோழர்கள் திரும்பி வந்தார்கள். மூச்சை அடக்கி நான் முடங்கிக் கிடந்தேன். அவர்கள் என்னை அழைத்தார்கள்; பிறகு அசைத்தார்கள்; உலுக்கி என்னிடம் பசுவைப்பற்றி விசாரித்தார்கள். பதிலும் சொன்னேன் ''பசி மயக்கத்தில் வீழ்ந்து கிடந்தேன்! எனவே பசுவைப் பற்றி எனக்கேதும் தெரியாது''. பசியோடு இருந்தாலும் அவர்களுக்குத் தலைவன் நான். எனவே, என் வார்த்தையை அவர்கள் நம்பினார்கள். விரயமான செயலினாலே வருத்தமுற்றார்கள். பிறகு மாவில் ரொட்டி செய்தார் கள். அதையே தின்று தண்ணீர் பருகினோம். மறுபடியும் பசுமகளைத் தேட எவருக்கும் தெம்பும் இல்லை, நினைப்பும் இல்லை.

போராட்டத்தின் முடிவில், கிளர்ச்சிக்காரர்களை கைது செய்தார்கள். அவர்களில் நானும் ஒருவன். படை விசாரணை மன்றில் வழக்கு தொடுக்கப்பட்டது. எனக்காக பரிந்துரைகள் குவிந்தன. ஆனால் பலன் ஒன்றும் இல்லை. எனக்குத் தூக்குத்தண்டனை விதிக் கப்பட்டது.

சிறைச்சாலை வெளியே நூற்றுக்கணக்கானவர் நின்றிருந்தார்கள். தூக்கு மேடையில் நிறுத்தி வைக்கப் பட்டு சிவப்புத் தொப்பியும் எனக்கு அணிவிக்கப்பட் டது. என் கண் முன் இவ்வுலகம் இருண்டு கிடந்தது. கழுத்துக்கு கயிறு இறக்கப்பட்டது. என்னை ஏற்றி வைத்த மேடை இடறப்பட்டதாக உணர்ந்தேன்.

அகழியில் விழுந்ததாக நினைத்தேன். பயத்தால் என் இரத்தமெல்லாம் சுண்டிப் போய் இருந்தது. குரல் கொடுக்கவும் முடியாமல் தொண்டை வறண்டுபோய் இருந்தது. நினைவற்று இருந்தேன்! சற்று நேரத்திற் கெல்லாம் மயக்கம் தெளிந்தது! 'இறக்கவில்லை இன்னும் இவ்வுலகில்தான் இருக்கிறேன்' என்பதை உணரலானேன்.என் இரண்டு கால்களின் கீழேயும் இரண்டு கொம்புகள் முளைத்து இருந்தன.அதன் மேல்தான் நின்றிருந்தேன். அகழியில் நான் விழவே இல்லை. கழுத்திற்கு இறக்கப்பட்ட கயிறு தளர்ந்தே இருந்தது.

'நான் இறந்துவிட்டேன்' என்று நினைத்து அவர்கள் என்னை வெளியே தூக்கி எறிந்தார்கள். டாக்டர் என்னை உயிருடன் பார்த்தவுடன் கூச்சலிட் டார்; என்ன செய்தும் நான் நலமாக இருப்பதைக் கண்டு அவரது திகைப்பிற்கு அளவின்றிப்போனது, என்று என்னிடம் பலமுறை அவர் கூறலானார்.கோர்ட் மார்ஷலின் ஆணைக்கு இணங்க மூன்று முறை தூக்குத் தண்டனையை நிறைவேற்ற முயற்சித்தார்கள், ஒவ் வொருமுறையும் என் காலின் கீழே கொம்புகள் முளைத்தன; நான் உயரே வளரலானேன்! ஒவ்வொரு முறையும் தூக்குக்கயிறால் என் குரல்வளையை நெறித்து, என் உயிரைப் பருக முடியாமல் போனது; நான் உயிர் பிழைத்துக் கொண்டே இருந்தேன்! இறுதியில் சலிப்படைந்து என்னை விடுவித்துவிட்டார் கள். ஆண்டவன் என்னை வாழவைத்திருக்கிறார்.

என் உறவினர்களோடு நான் வெளியே வந்தேன். ஓர் பசு, தன் அப்பாவித்தனமான கண்களினால் என்னைப்பார்த்தவாறு தன் சின்னஞ்சிறு துள்ளும்

கன்றுக்குட்டியுடன் சென்று கொண்டு இருந்தது. உடனே எனக்கு டில்லியில் நடந்த கலவரச் சம்பவம் நினைவு வந்தது! கண்ட துண்டமாக்கக் காத்திருந்த தோழர்களின் கடும்பிடியில் இருந்து காப்பாற்றிய போது, நன்றிப் பெருக்கோடு என்னை நோக்கி விட்டுச் சென்ற அப்பசுவின் செயல் ஞாபகம் வந்தது.

என் மதத்திலே உருவவழிபாடு பாவமாக கருதப்பட்டு வருகிறது. ஆனால், எனக்கு உயிர்ப் பிச்சை வழங்கிய அப்பசுவின் முன், தலைவணங்கி னேன்.

அன்றிலிருந்து, உடல்-பொருள்-ஆவி என்ற இம்மூன்றினாலும் பசுபூஜை செய்தலை என் தருமமாக மதிக்கறேன். என் உயிர் போகும்வரை இத்தருமத் தைக் கடைப்பிடிப்பேன். ஒவ்வொரு நாளும் தவறா மல் பசுக்களின் பாதங்கள் பதிந்த மண்துகளை நெற்றியில் அணிந்து கொள்கிறேன். பிறகு தான் நமாஸ் படிக்கவே செல்கிறேன்.



# பசு பக்தியின் அதிசயப் பலன்

**எழுதியவர் : ஸ்ரீ இராமேஸ்வர் தயாள்ஜி ஸ்ரீமாலீ**

தற்காலத்தில், உலகியல் நடவடிக்கைகளில் மனி தர்கள் உழன்று, பசு சேவையின் பெருமையைத் தெரிந்து கொள்ளாவிட்டாலும், பசுவின் உடலிலே அனைத்து தேவதைகளும் குடிகொண்டிருக்கிறார்கள் என்று, அநுபவபூர்வமாக உணர்ந்திருக்கிறார்கள்.

ஆயுர்வேதத்தில் நிபுணரான வைத்யராஜ் லக்ஷ்மண் சிங்ஜீயின் தர்மபத்தினி ஸ்ரீமதி கங்கா கவுர், கி.பி.1960 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 5 ஆம் நாள் அமரரானார். அமரராவதற்கு ஆறுமாதம் முன், உடல்நிலை திருப்திகரமாக இருந்தாலும், தான் கடைசி நாட்களை கணக்கிட்டுக் கொண்டிருப்பதாகவும் வைத்யராஜியிடம் கூறியிருந்தார். வைத்யராஜ் மிகுந்த அறநெறியாளர்; இருப்பினும், மனைவி கூறிய இவ் வார்த்தைகளில் அவருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை!

இறப்பதற்கு இரண்டு மாதங்கள் முன்னே, கங்கா கவுர் மறுபடியும் தனது இறுதி நாளை நினைவு கூர்ந்தார். ஹரிபஜனையிலும் பசு வழிபாட்டிலும் தன் நாட்களைக் கழிக்கலானார். 1960 ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 23 ஆம் நாள் ஏதோ பேச்சுவாக் காக மறுபடியும் நினைவு கூர்ந்தார். இறப்பதற்கு இரண்டுநாள் முன்னதாகவே 'ஸ்ரீராமநாமமும், ஓம்' எனும் மூல மந்திரமும் ஓதப்படலாயின.

குறித்த சமயத்தில் அவர் கூட்டைவிட்டு நினைவு பிரிந்தது. வைத்தியர், கஸ்தூரி போன்ற மருந்துகளை அளித்து மறுபடியும் அவருக்கு நினைவு கொண்டுவர முயற்சித்தார். முயற்சி பலனளித்தது. ''தேவி!'... யோகிகள், முனிபுங்கவர்கள் போன்றோருக்கே தெரி யாது இருக்கும் இந்த காலதேவனின் வருகை உனக்கு மட்டும் எப்படித் தெரிய வந்தது?'' - லக்ஷ்மணசிங் ஆவலுடன் வினவினார்.

ஸ்ரீமதி கங்காகவுர் கூறினார் ''இவையனைத்தும் பசுசேவையின் மகிமையினால்தான்! ஒவ்வொரு நிமிட மும் நான் மேலேமேலே படியேறிச் சென்று கொண்டு இருப்பதாக இன்னமும் எனக்குத் தோன்றுகிறது.

சற்றுமுன் நாய்களைப் போன்ற ஏதோ சில விலங்குகள் என்மீது கூட்டம் கூட்டமாகப் பாய்ந்து வந்தன. அப்போது ஒரு பசுக்கூட்டம் என்னைச் சுற்றி நின்று கொண்டு என்னைக் காத்தது. அக்கூட்டத்தில் இருந்த ஒரு பசுதான் என்மீது இரக்கப்பட்டு என்னை இங்கு அனுப்பி வைத்துள்ளது. தங்களின் ஐயப்பாட்டைப் போக்கி உடனே திரும்பிவரவும் பணித்திருக்கிறது.

இவ்வாறு சொல்லியவாறு, தயிர் சேமித்து வைத்திருக்கும் உறியைக் கேட்டாள். பிறகு அவ்வனைத்து தயிரையும், பாலையும் கன்றுக்குட்டிக்கே அளிக்கும்படி கூறினார். ''என் தாய் இங்கு வந்ததும் மிகவும் அழுவார். 'அவரை சாந்தப்படுத்த வேண்டும், அவரை அழ அனுமதிக்காதீர்'. அவரும் இராமநாமத்தையும் 'ஓம்' மூல மந்திரத்தையும் உச்சரிக்கச் சொல்லி அழாமல் இருக்கச் சொல்லுங்கள்'' இப்படிக் கூறியவாறே பசுவின் தயிரை உண்டு அவர் மீளாத் துயிலில் ஆழ்ந்தார்.



# பசு சேவையின் பலன்

பனாரசில், கோஜ்வா பாஜாரின் மேற்கு பகுதியில் ஒரு அந்தணன் வசித்து வந்தான். அவனிடம் போதுமான பணமும் இல்லை! அவனுக்குப் புத்திர பாக்கியமும் இல்லை. பசுசேவை செய்தால் அனைத்தும் நன்றாக அமையும் என்று ஒரு சாது கூறினார். முழு மனதுடன் அவனும் சேவை செய்தான். இதன் விளைவாக, அவனது அனைத்துக் கஷ்டங்களுக்கும் விடிவு ஏற்பட்டது. பல மாளிகைகள் கட்டினான். யாராவது வயதான பசுவை தம் மகன்களிடம்

கொடுக்க வந்தால், அவைகளை அவன் ஏற்றுக் கொள்கிறான். வேண்டுமென்றால், பதிலுக்கு கிடாரிக் கன்று குட்டி ஒன்றையும் தருகிறார். ஆனால் ஓர் நிபந்தனை விதிக்கிறார். எக்காரணங்கொண்டும் அதைப் பெறுபவர் விற்கக்கூடாதாம்.

அந்த அந்தணன் அன்றாடம் பசு மூத்திரத்தில் நீராடி வந்தான். அதைக் கங்கை ஜலத்திற்கு நிகராக மதித்தும் வந்தான்.

-காசி பிரசாத் மிஸ்ரா
வேதாசார்யா.



# கசாப்புக் கடைக்குப் பசுவை விற்றால் குலநாசம்

(எழுதியவர்: ஸ்ரீ ஹரிபிரசாத்ஜி குப்தா)

ஒரு கிராமத்தில் ஒரு பணக்கார வியாபாரி இருந்தான். அவனது வீட்டில் தன-தானியம் குவிந்து கிடந்தது. கிட்டத்தட்ட அவனது குடும்பத்தில் 70-75 பேர் இருந்தனர். அவனது கிராமத்தில் பசுக்களும் இருந்தன. அவைகளில் ஒரு பசுமாடு மேய்வதற்கு அழைத்துச் சென்றாலும், கறக்க அவிழ்த்தாலும் அடம் பிடித்தது. வீட்டார்கள் அனைவரும் அதைக் கசாப்புக் கடைக்கு விற்க நிச்சயித்தனர்.

ஒரு நாள் வீட்டிற்கு கசாப்புக் கடைக்காரன் வந்தான். அவனிடம் பசுவை வீட்டார் விற்றனர். கசாப்புக்காரனிடம் ஒப்படைக்க பசுவை அவிழ்க்கச் செலகையில், மிகவும் விரைவாக அதுவே கசாப்புக்கா ரன் கைகளில் தானாகவே சென்றுவிட்டது. கிராமத்தார்

கள் சொன்னார்கள், "லாலாஜி! பசுவைத் திரும்பப் பெற்றுக் கொள்! இது கண் எதிரே காட்சி தரும் திருமகள். கசாப்புக்காரன் கைகளில் இதை ஒப்படைக் காதே!", ஆனால் அவன் இவர்களின் வார்த்தைக ளுக்கு காது கொடுக்கவில்லை. கசாப்புக்காரன் கறவையை இழுத்துச் சென்றான்; கசாப்பு வாளிற்கு பலியாக்கினான்.

இரவில் (பசு அன்னை) கோமாதா வணிகனின் கனவில் தோன்றி சாபமிட்டாள், "என் உண்மையான நிலைமையைப் புரிந்து கொள்ளாமல், இரக்கம் இல்லாமல் என்னை கசாப்புக்காரன் கைகளில் விற்று விட்டாய்! எனவே விரைவிலேயே உன் குடும்பமும் நிர்மூலமாகக்கடவது!" இது நடந்து சில நாட்களி லேயே கிராமத்தில் பெருவெள்ளம் வந்தது. அதில் அவனது அனைத்து தானியமும் அடித்துச் செல்லப் பட்டு விட்டது. அடமானமாக பொதுமக்கள் அவனி டம் விட்டுச்சென்ற நகை, பாத்திரங்கள் அனைத்தும் நிலவறையில் வைத்து இருந்தான். எல்லாம் வெள்ளத் தில் அடித்துச் செல்லப்பட்டன. இதற்குப் பிறகுதான் "பிளேக்" நோய் பரவியது. 7-8 நாட்களுக்குள் மனைவி மக்களையும் சேர்த்து 60 பேர் அழிந்து போனார்கள்.

இந்த விதமாக, தன-தானியத்தால் செழித்து இருந்த கிருகஸ்தன், கோமாதாவின் சாபத்தால் சிறிது நாட்களிலேயே குலநாசம் அடைந்து விட்டான். அவனால் சமாளித்து இன்னமும் நிற்கக்கூட முடிய வில்லை! (உண்மைச் சம்பவம்)



# கோசேவை

ஒருவன் மிகக் குறைந்த விலையில், கிழக்கு வங்காளத்தில் ஒரு சணல் பிரஸ் (தொழிற்கூடம்) வாங்கினான். யார் அதை வாங்கினாலும், அவனுக்கு எந்த விதமான லாபமும் இருக்காது என்று பரவலாகப் பேச்சு இருந்தது. அது மட்டுமல்ல, அதை வாங்கியவு டன் அடுத்தடுத்து கேடுகள் சூழும் என்று ஒரே புரளி. சொன்னவைகள் உண்மைதான்; இருந்தாலும் இவ்வ ளவு பெரிய செல்வம் குறைவான விலைக்கு கிடைக்கிறதே என்று அவன் இதை வாங்கி விட்டான்.

பிரஸ்ஸை வாங்கிய பிறகு பற்பல உடற் சீர்கேடும், பொருளாதாரச் சீர்கேடும் ஏற்படத் தொடங்கின. பூரி ஜெகந்நாதரின் ரத யாத்திரைக்குப் பிறகு, ஒரு ஸ்வாமிஜி திரும்பி வருகையில், அவனது இருப்பிடத்தில் தங்கினார். அவரிடம் அனைத்து விஷயங்களையும் அவன் சொன்னான். மறுநாள் ஸ்வாமிஜிக்கு தன் பிரஸ்ஸைச் சுற்றிக் காட்ட அழைத்துச் சென்றான்.

கங்கைக் கரையில் அழகான இடத்தில் விசால மாக அமைந்திருந்த பிரஸைப் பார்த்து "உன்மீது இறைவன் கடைக்கண் வைத்திருக்கிறான். அதனால் தான் இவ்வளவு பெரிய இடம் வெகு மலிவாக உனக்குக் கிடைத்திருக்கிறது. எனவே, இதை விற்க வேண்டும் என்ற எண்ணத்தைக் கைவிட்டு இவ்விடத் தைச் சூழ்ந்துள்ள மங்கலக் குறையைப் போக்க என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய், அது என்ன? என்று அவன் கேட்க 'கோ-சேவை' என்று ஸ்வாமிஜி பதிலளித்தார்.

''முடிந்த வரையிலான பசு மாடுகளைப் பராமரி! சில பசுக்களின் பாலை சுயநலனுக்காக ஒட்டஒட்ட நீயே கறந்து எடுத்துக் கொள்ளாமல், கன்றுக்குட்டிக ளின் பசி போக்கவே என விட்டுவிடு. அன்போடு அவைகளுக்குத் தேவையான புல்-புண்ணாக்கிற்கான ஏற்பாடுகளைச் செய்! நிலத்தின் மத்தியில் கோபால கிருஷ்ணனின் சிலையை பிரதிஷ்டை செய்; சிறு கோயில் அமை. பிறகு பார்... இந் நிலத்தையும் தொழிற்சாலையையும் சூழ்ந்துள்ள துரதிர்ஷ்டம் தானா கவே விலகிச் சென்றுவிடும்''.

அவனும் அப்படியே செய்தான். அமைதியும் ஆனந்தமும் அங்கு குடிகொள்ளத் தொடங்கின. இறையருளும் கோமாதாவின் கருணையும் மழை யெனப் பொழியலாயின. அப்பிரஸ் ''பிசாசுப் பிரஸ்'' என்று வழங்கப்படத் தொடங்கியது. முதன்முதலில் இங்கு பணிசெய்யத் தயாராக இல்லாதவரும், இரவு நேரங்களில் அப்பிரஸின் எந்திரங்களைப் பூதங்கள் இயக்குவதாகச் சொல்லலானார்கள். கோமாதாவின் கருணையால் பற்பல நவீன இயந்திரங்கள் நாளுக்கு நாள் இயங்கலாயின. அத் தொழிற்சாலையின் எசமா னருக்குப் போதுமான லாபம் கிடைக்கலாயிற்று.



# கோமாதாவின் கருணை

எங்களூர் ஸ்ரீராம்பூர் மில்லின் நிகழ்ச்சி. பல வருடங்களுக்கு முன் ஸ்ரீராம்பூரில் (அகமத் நகர்) ஸ்ரீ லக்ஷ்மி இண்டஸ்ட்ரீஸ் பெயரில், ஸ்ரீ ரகுநாத், தாஸ் தூத் கம்பெனியின் பங்கோடு ஆயில்மில் ஆரம்பிக்கப்பட்டது. தொடக்கத்தில் இரண்டு வருடங்

கள் வரை, இயந்திரங்கள் உடைந்து கொண்டே வந்தன. அடிக்கடி நஷ்டம் ஏற்பட்டது. மிகவும் கஷ்டமாக இருந்தது. லட்சக்கணக்கான முயற்சிகள் செய்தும்கூட எங்களால் சமாளிக்க முடியவில்லை.

ஒரு நாள் எங்கள் மில்லின் முன் ஒரு பசு கிடப்பதைக் கண்டோம். கசாப்புக்காரன் அதை இழுத்துச் செல்ல மிகவும் முயற்சித்துக் கொண்டு இருந்தான். அடித்தான்; இழுத்தான்; பலனில்லை! கொஞ்சம் கூட இந்தப் பசு நகரவில்லை! பார்ப்பவரின் கண்களில் கண்ணீர் பெருக்குற்றது. மில்லின் தொழிலாளர்கள் மானேஜரிடம் சென்று இதைப்பற்றிச் தெரிவித்தார்கள். வெளியே வந்த மானேஜர் ரூ.36-க்கு வாங்கி இழுத்துச் செல்ல முயற்சித்துக் கொண்டிருந்தவனுக்கு ரூ.5 மேற்படியாகக் கொடுத்து (மொத்தமாக ரூ.41) புஷ்டியாக இருந்த அப்பசுவை அவனிடம் இருந்து மீட்டார். கசாப்புக்காரனின் கசையடிக்கு மசியாத பசு, அவனது கைகளில் இருந்து விடுபட்டவுடன் நேராக மில்லினுள் நுழைந்து விட்டது.

அப்போதையில் இருந்து அந்தப் பசுமாடு மில்லிலேயே பராமரிக்கப்பட்டது. அந்த மில்லிற்கு இப்பசு வந்ததன் பிறகு நாளுக்கு நாள் நிலைமை சீரடையத் தொடங்கியது. எந்த மில்லை இயக்குவதில் எண்ணற்ற தடைகள் இதுகாறும் வந்து கொண்டு இருந்தனவோ, இப்போது அதே மில் கோமாதாவின் கருணையினால் நன்றாக இயங்கிக் கொண்டு இருக்கிறது. அப்பசு நல்ல இனத்தைச் சேர்ந்த மூன்று கன்றுக் குட்டிகளை ஈந்திருக்கிறது. தினமும் 5 லிட்டர் பால் கொடுக்கிறது. சிறு குழந்தைகூட அதன் அருகே செல்கின்றது. ஆனால் அப்பசு அதை ஒன்றும்

செய்வதில்லை. இதிலேயும் ஓர் வியப்பு! வேறு எந்த விலங்கையும் அப்பசு தன்னருகே நெருங்கவும் அனுமதிப்பதில்லை! இறைவன்தான் நலங்கொழிக்கும் அப்பசுவை எங்கள் மில்லின் வாயிலுக்கு அனுப்பி வைத்துள்ளான்! அவனுக்கு நாங்கள் மிகமிக நன்றிக்க டன் பட்டிருக்கிறோம்!

- மதன்லால் புப்



# பசு பராமரிப்பின் பயன்

**(எழுதியவர்: பசு பராமரிப்பில் ஈடுபட்ட ஒரு குடியானவர்)**

என் முன்னோர்கள் கிராமத்தில் செழிப்போடு இருந்தார்கள். என் தந்தையாரும் சிறப்பாக வாழ்ந் தார். தினமும் 4 மணிநேரம் இறைவழிபாட்டிலும், மீதி நேரத்தை பண்ணை வியாபாரத்திலும், தானியக் கிடங்கிலும் செலவழித்து வந்தார். இந்த தினப்படி வேலைகளை மிகவும் ஆர்வமுடன் ஆற்றி வந்தார். போதுமான அளவிற்கு நிலத்தை தக்க வைத்திருந்தார். அவர் உழவுத் தொழிலைச் செம்மையாக செய்து வந்தார். எனவே கிராமத்தாருக்கும் அவரிடம் ஓர் அலாதியான மரியாதை. இவரால் எல்லோரும் ஆனந்தமாக வாழ்ந்தனர். தந்தையார் பரலோகவாசி யான பிறகு, குடும்பப் பொறுப்பு என் தோள்களில் இறங்கியது. கூடவே, செல்வத்தில் தேய்மானம் ஏற்படத் தொடங்கியது. வெகு விரைவில் தந்தையார் விட்டுச் சென்ற செல்வத்தில் பாதிமட்டுமே என்னிடம் தங்கி இருந்தது. விவசாயம் ஸ்தம்பித்தது; தானியக்

கிடங்கு குறைவுற்றது; வருமானம் நின்றது; வயலில் சாகுபடி குறைந்தது. நிலத்தின் பெரும்பகுதி தரிசா னது; பார்த்துக் கொண்டு இருக்கும்போதே எல்லாம் பாழாயின.

இரவுபகல் இதைப்பற்றி நான் கவலைப்படத் தொடங்கினேன். அதிர்ஷ்டத்திற்கு என்மீது கரிசனம் இன்றிப் போனது. தொட்ட காரியங்கள் எல்லாம் துவண்டு போயின. எனக்கு இரு தம்பியர். அவர் களின் விருப்பத்திற்கு இணங்க, வேறு வழியின்றி, நான் தனியாக வாழ நேர்ந்தது. அனைத்துச் செல்வ மும் மூன்று பங்குகளில் சரியாகப் பங்கிடப்பட்டது! நாங்கள் மூவரும் தனித்தனியாக உழவுத் தொழிலை மேற்கொண்டோம். நான்கு வருடங்கள் நகர்ந்தன. ஆனால் என் நிலைமையோ, நாளுக்கு நாள் சீர் குலையத் தொடங்கியது. கிராமத்தார் எனக்கு 'உழைக் காதவன்', 'சோம்பேறி' என்ற பட்டங்கள் சூட்டலாயி னர். என்மீது கடன் பளுவும் அதிகரித்து வந்தது. தானியத்திற்காக மற்றவரின் முகம் பார்க்கும் அள விற்கு மோசமடைந்தேன்.

இன்னும் சொல்லப்போனால் என்னிடம் கை நீட்டித் தானியம் பெற்றவரிடமே நான் கை நீட்ட வேண்டிய நிலை உருவானது. அவர்களின் வீட்டு வாசலுக்கே செல்ல நேர்ந்தது. ஆனாலும் நான் என் தைரியத்தை தன்னம்பிக்கையை விடவில்லை! கடவுள் மீது நம்பிக்கை வைத்தேன். கஷ்டம் வரவர அந்த நம்பிக்கை இன்னும் திடமானது.

ஒருநாள் கவலையோடு கட்டிலில் படுத்துக் கிடந்தேன். தூக்கம் கண்களைத் தழுவியது. துக்கம் கொஞ்சம் கொஞ்சமாக விலகியது. கனவிலே காளை

மாடொன்றும் பசுமாடொன்றும் என்னை முட்டுவதற் காக என்னை நோக்கி ஓடி வருவதாகக் கண்டேன். திடீரென்று மாடுகள் மானுட மொழியில் பேசத் தொடங்கின ''நாங்கள் உன்னை இன்னமும் தொல் லைப்படுத்தப் போகிறோம். 'நீ சாப்பிட வேண்டும் வாழ வேண்டும்' என்று நினைப்பதை ஒழித்து, எப்போதாவது எங்களைப் பற்றி நினைத்துப் பார்த் தாயா? எத்தனை நாட்களாக உண்ண உணவின்றியும், அருந்த நீரின்றியும் நாங்கள் தொழுவத்தில் வாடிக் கொண்டு இருக்கிறோம்? எங்களைப் பற்றி என்ன தெரியும் உனக்கு? எப்போதாவது தொழுவத்திற்கு வந்தாவது பார்த்திருக்கிறாயா? நீராடிப் பலநாள் ஆகின்றன! குப்பை-சாணியிலும், மூத்திரச் சேற்றிலும் அசுத்தமாகக் கிடக்கிறோம். இந்த பாவத்தின் பல னைத்தான் நீ அனுபவித்துக் கொண்டு இருக்கிறாய். இப்போதாவது புத்தி வந்து உன் போக்கை மாற்றிக் கொள்! இல்லை என்றால் இறுதியாக எச்சரிக்கி றோம்... சர்வ நாசம்தான்''.

காளை-பசுவின் கனவு வார்த்தைகளைக் கேட்டு எனக்கு வேதனை ஏற்பட்டது. திடுக்கிட்டு எழுந்தேன். கனவுதான் என்றும் தெரிந்து கொண்டேன். பாதி ஜாமத்தைக் கடந்து விட்டேன் என்பதையும் அறிந்து கொண்டேன. அப்போதே லாந்தரை எடுத்துக் கொண்டு தொழுவத்திற்குச் சென்றேன். வாட்டும் பசியோடு பசுமாடுகள் கட்டப்பட்டிருப்பதைக் கண் டேன்; கவலையுற்றேன், கலங்கினேன். அசைபோடுவ தற்குக்கூட ஓரிரு புல்லோ புண்ணாக்கோ அருகிலே இல்லாமல் இருந்தது. எங்கு பார்த்தாலும் குப்பைக்கூ ளமாகக் கிடந்தது. உளமார நான் பச்சாத்தாபப்பட் டேன். இத்தனை நாட்கள் இதைப்பற்றி நினையாது இருந்ததை நினைத்து மிகவும் உளம் நொந்துகொண்

டேன். அப்போதே தொழுவத்தைச் சுத்தப்படுத்தும் பணியில் ஈடுபட்டேன். மறுநாள் காலை 10 மணி வரையில் சுத்தம் செய்யும் பணி தொடர்ந்தது. அன்றையில் இருந்து ஒவ்வொரு நாளும் பசுக்களின் பராமரிப்பில் கவனம் செலுத்தி வந்தேன். காலை மாலை இரு வேளையும் என் கைகளால் பால் கறந்தேன்! கழுநீர், புல், புண்ணாக்கு என் கைகளால் வேளை வேளைக்கு பசுக்களுக்குக் கொடுத்து வந்தேன். பசும்புல் மேய முதலில் நானே அழைத்துச் சென்றேன். குடிப்பதற்கு சுத்தமான தண்ணீரை நானே கொண்டு வைத்தேன். என்னுடைய தினசரி பணிகளில் இவை முக்கிய அங்கம் வகித்தன. புல்மேய பசுக்கள் செல்கின்றபோது தொழுவத்தைச் சுத்தப்படுத்தினேன். குப்பை-கூளங்களை தனியான ஓர் குழியில் ஒதுக்கி வந்தேன். அதுவே நாளடைவில் நல்ல உரமாயிற்று. பசுக்கள் சந்தோஷமாக இருந்தன. அவைகள் புஷ்டி யாகக் காட்சியளித்தன. நெய்யும் பாலும் நிறையக் கிடைத்தன. காளைகளின் உடல் வளத்தினால் என் உழவுத்தொழில் செழிக்கத் தொடங்கியது. மகசூல் அதிகரித்தது. ஐந்தாறு மடங்கு சாகுபடியானது. விவசாயத்தில் என் விருப்பம் கூடிற்று. அவநம்பிக்கை என்னிடம் இருந்து விடைபெற்றுச் சென்றது.. பெருவா ரியான கடன் திருப்பப்பட்டது. என் வாழ்வு நிலையில் பிரமிக்கத்தக்க மாற்றம் ஏற்பட்டது. 'உருப் படாதவன்', உழைக்காதவன்', சோம்பேறி' என்று எனக்குப் பட்டமளித்த கிராமத்தவர் இப்போது என்னை வாயாரப் புகழத் தொடங்கினார்.

இது என் வாழ்க்கையில் நிகழ்ந்த உண்மையான சம்பவம். 'மிராசுதார்' என்ற நினைப்பில் என் செல்வமெல்லாம் கரைந்தது. ஆனால் இன்று இறைய ருளாலும் கோமாதாவின் கடைக்கண் பார்வையாலும்,

ஆசியாலும் என் கைகளாலே வேலை செய்ததால் என் நிலைமை முற்றிலும் மாறத் தொடங்கியது. பசு வளர்க்கும் குடியானவர் யாரேனும் என்னைப் போன்று வறுமையுற்று தரித்திர தாண்டவத்தைக் காண நேர்ந்தால், என் வழியைப் பின்பற்றலாம். இறை நம்பிக்கை, கோமாதா சேவை, இவ்விரண்டும் மிகமிக குன்றிப்போயிருக்கும் நிலைமையை மாற்றி மகோன்னத மான வளர்ச்சியை நமக்கு நிச்சயமாகக் கொடுக்கும்.



# பசுக்களைக் கொடுமைப்படுத்துவதற்குக் காரணம் இனக்கலப்பு

(எழுதியவர்: பக்த இராமசரண் தாஸ்ஜி)

**(பஞ்சாப கேசரி மகராஜா இரஞ்சித் சிங்கின் ஒரு வாழ்க்கைச் சம்பவம். சரித்திர பூர்வமான உண்மை நிகழ்ச்சி)**

பஞ்சாப கேசரி மகராஜா இரஞ்சித் சிங்கின் வாழ்க்கையில் நடைபெற்ற ஓர் உண்மை நிகழ்ச்சி இங்கே கொடுக்கப்படுகிறது. கோமாதாவிற்கு எதிராக வும், பசுக்கொலை தடுப்பதற்கு எதிர்ப்பும் தெரிவிக் கும் சில இந்துக்களின் செய்கை, வருண அமைப்பை ஏற்காமல் இருந்ததால் ஏற்பட்டிருக்கிறது என்பது இதனால் நன்கு விளங்கும்.

மகாராஜா இரஞ்சித் சிங் ஆட்சி நிலவிய சமயம் லாகூரில் அவர் தங்கியிருந்தார். மகாராஜா, மகா மாயா பகவதி துர்காதேவியின் உபாசகர்; பசு-பிராமணர்களைப் போற்றிய பக்தர். பசுக்களும்

பிராமணர்களும் பயமின்றி நாட்டில் வலம் வருவ தைத் தன் ஆட்சியின் சிறப்பாக நினைத்தார்.

ஒருமுறை நடந்த நிகழ்ச்சி; லாகூரில் ஒரு செல்வந்தர் தம் மாளிகையின் முன்னால் ஒரு பொதுக் கிணறு தோண்டி வைத்திருந்தார். அதற்கு அருகி லேயே பசு எருதுகளுக்காகத் தண்ணீர் குடிப்பதற்குத் தொட்டி கட்டி வைத்திருந்தார். இத்தொட்டிகளில்தான் தண்ணீர் நிரப்பப்பட்டு வந்தது.

ஒரு நாள் ஓர் பசு தண்ணீர் பருக அங்கே வந்தது. தொட்டியில் இருந்த நீரைப் பருகியது. தொட்டிக்குப் பக்கத்தில் ஒரு ஜன்னல் துவாரம் இருந்தது. அதன் வழியாகப் பார்க்கும்போது அதன் கண்களுக்கு அங்கு சாக்கடைப் பக்கத்தில் இரைந்து இருந்த கோதுமை தென்பட்டது. அங்கு சாக்கடையின் மேல் சுவர் கட்டப்பட்டிருந்தது. கோதுமையை உண்ண நினைத்ததால் கஷ்டப்பட்டு தன் முகத்தை அந்த ஜன்னல் முகப்பில் நுழைத்து விட்டது. கோதுமையையும் சாப்பிட்டு விட்டது. பிறகு தன் முகத்தை வெளியே எடுக்க முயன்றது. ஆனால் அதன் கொம்புகள் எசகேடாக ஜன்னல் துவாரத்தில் சிக்கிக் கொண்டது. பசு கதறோ கதறென்று கதறியது. தலையை வெளியே எடுக்க முடியவில்லை! துடிதுடித் தது; கூட்டம் கூடியது; குழப்பம் ஏற்பட்டது. வலி தாங்க முடியாமல் கால்களை உதறத் தொடங்கியது. கதறல் இன்னும் மிகைத்தது. உண்மையான இந்துக்க ளால் இதை எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும்? பசுவிற்கு எந்தப் பாதகமும் இல்லாமல் முகத்தை வெளியே எடுக்க, முயற்சிகள் மும்முரமாக எடுக்கப் பட்டன. ஆனால் பலனில்லை! எப்படி கோமாதாவின் உயிரைக் காப்பாற்றுவது என்ற கவலை இப்போது

எல்லோருக்கும் ஏற்பட்டது. கூட்டத்தில் இருந்து ஒரு குரல் - ''சுவரை இடிக்க உடனடியாக மேஸ்திரியை கூப்பிடுங்கள். அப்போதுதான் பசுவின் உயிரைக் காப்பாற்ற முடியும்''. இதைக் கேட்டு, பக்கத்திலேயே நின்றிருந்த ஓர் இந்து கூறினான், ''எதற்குச் சுவரை இடிக்க வேண்டும்? சுவரை இடித்தால் கட்டிட முதலாளிக்கு மிகப் பெருத்த நஷ்டம் ஏற்படும். இதனால், தச்சனிடம் இருந்து இரம்பத்தை வாங்கி வாருங்கள்! கொம்பைச் சீவி விட்டால் முகம் வெளியே வந்துவிடும்''.

இந்து ஒருவன் இப்படிச் சொன்னது எல்லோருக்கும் கவலையைத் தந்தது. இறுதியில் சுவரை இடிக்க தீர்மானம் இயற்றப்பட்டது. விரைவாக மேஸ்திரி அழைக்கப்பட்டார். சுவர் இடிக்கப்பட்டது. பசு உயிர் காப்பாற்றப்பட்டது. இதனால் எல்லா இந்துக்களிடையேயும் சந்தோஷம் இழைந்தோடியது. அங்கு இராஜா இரஞ்சித் சிங்கின் ஒற்றன் ஒருவனும் இருந்தான். அவனும் இக்காட்சியைக் கண்கூடாகக் கண்டான். மாலை நேரத்தில் இராஜாவைச் சந்திக்கச் சென்ற போது, நகரத்தில் நடந்த முக்கிய விஷயங்களை வர்ணிக்கலானான். முறையாக நிகழ்ச்சிகளை மொழியலானான். ஓர் இந்துவின் மூலமாக கொம்பைச் சீவும் யோசனையைக் கேட்டு, மகராஜாவுக்கு கோபம் வந்தது. ஒற்றனிடம் முன்னும் பின்னுமாக பல கேள்விகளைக் கேட்டு உண்மையாகவே ஒரு பசுவின் கொம்பைச் சீவும் யோசனை ஓர் இந்துவால் சொல்லப்பட்டது, என்பதை ராஜா ஊர்ஜிதப்படுத்திக் கொண்டான். உளம் நொந்தான். உடனடியாக அவனை இழுத்து வரக் கட்டளையிட்டான்.

ராஜா: யாரப்பா நீ?

இந்து: மகாராஜா! நான் ஓர் இந்து

ராஜா:கோமாதாவின் கவுரவம் குலையும்படி என்ன சொன்னாய்? உண்மையாகச் சொல்...

இந்து: மகாராஜா! மன்னிக்க வேண்டும். சுவற்றை இடிப்பதற்குப் பதிலாக பசுமாட்டின் கொம்பு களை இரம்பத்தால் சீவி விடலாம் என்று பேச்சோடு பேச்சாக என்னையும் அறியாமல் சொல்லிவிட்டேன்.

ராஜா: இந்துவாக இருந்துகொண்டு இப்படிப்பட்ட இழி சொல் எப்படி உன் வாயிலிருந்து வரலாம்?

இந்து: தெரியாமல் சொல்லிவிட்டேன். மன்னித்து விடுங்கள்!

ராஜா: ஓர் இந்துவாக இருந்துகொண்டு கோமாதாவின் கொம்புகளில் உன் கையால் இரம்பத்தால் சீவக் கூடிய யோசனை எப்படி வந்தது? சொல்?...

இந்து: மகராஜா! தெரியாமல் சொல்லி விட்டேன்.

ராஜா: ஏன் வந்தது?...

இந்து: மகராஜா! எனக்குத் தெரியாது.

ராஜா: ஓ.ஹோ...நீ ஓர் இந்துக் குடும்பத்தினைச் சார்ந்தவன் இல்லை என்று தோன்றுகிறது.

இந்து: இல்லை மகராஜா! நான் இந்துதான்.

ராஜா: அடே...நீ இந்து இல்லை! இந்து ஒருவன் வாயிலிருந்து கோமாதாவிற்கு ஊறு விளைவிக் கும் சொல் ஒருபோதும் வெளிவராது.

இந்து: வெளிவராது. உண்மைதான். ஆனால் என் வாயிலிருந்து வெளிவந்துவிட்டது.

ராஜா: உண்மையான இந்து தம்பதியருக்கு நீ பிறந்திருக்க முடியாது என்று தோன்றுகிறது. உண்மையைச் சொல்! இல்லையென்றால் உன்னைச் சிறைக் கைதியாக்கி விடுவோம்!

இந்து: மகராஜா! உண்மையைத்தான் சொல்கிறேன், எனக்கெதுவும் தெரியாது.

உண்மையை அறிய, அவனைச் சிறையில் தள்ளவும், அவன் தாயை அழைத்து வரவும் ஆணை பிறப்பித்தான் இரஞ்சித் சிங்.

தன் ஆட்சியில் தகுதியற்ற இந்துவும் வசிக்கிறானே என்று மிகவும் கலக்கமடைந்தான் மகராஜா.

கட்டளைக்காகத்தான் காத்து இருந்தார்கள். இந்து சிறையில் தள்ளப்பட்டான். அந்த இந்துவின் தாய் அவைக்கு அழைத்துவரப்பட்டாள்.

ராஜா: கிழவி! நீ யார்?...

கிழவி: மகாராஜா! நான் இந்து.

ராஜா: உண்மையைச் சொல். நீ இந்துவானால் உன் வயிற்றில் இருந்து இப்படிப்பட்ட தகுதியற்ற மகன் எப்படிப் பிறப்பான்? இந்துவாக பிறந்த ஒருவன் கோமாதாவின் கவுரவம் குலையும்படியான வார்த்தையை எப்படிப் பிரயோகிப்பான்?

கிழவி: மகராஜ்! எனக்குத் தெரியாது.

ராஜா: மனித இனத்தில், எப்படி இப்படிப்பட்ட அரக்கன் பிறந்தான்? யாருக்குப் பிறந்தவன் இவன்? சொல்!

கிழவி: மகராஜ், நான் என் கணவனைத் தவிர வேறு யாரையும் நினைத்துக்கூடப் பார்க்கவில்லை.

ராஜா: இல்லை. இவன் உன்னுடைய இந்துக் கணவனின் குழந்தை இல்லை.

கிழவி: இல்லை! மகராஜா இல்லை!

ராஜா: பிறகு, அப்படிப்பட்ட குழந்தை எப்படிப் பிறந்தது?

கிழவி: ஒன்றும் தெரியாது.

இதைக் கேட்டு, மகராஜா, மகனிற்கு மரண தண்டனை விதிப்பதாகப் பயமுறுத்தினான்; ஆயுள் தண்டனை வழங்கப் போவதாக மிரட்டினான். கிழவி நடுங்கினாள். கைகால்கள் உதறத் தொடங்கின. உண்மையைச் சொல்ல முற்பட்டாள்.

கிழவி: மகராஜா! மன்னிக்க வேண்டும். நான் பதிவிரதை என்பது உண்மை. மறந்தும்கூட இன்னொருவருடன் கூடுவதாக, நினைத்துப் பார்த்ததுகூடக் கிடையாது. என் கட்டிடத்திற்கு எதிரே அடிக்கடி செத்த விலங்குகளின் தோலை உரித்துக் கொண்டு ஒருவன் இருப்பான். எந்த இரவுக் காலத்தில், நான் கருவுற்று வெளியே வந்தேனோ, என் பார்வை முதன் முதலில் அவன் மீது பட்டது. இதனால்தான் இப்படிப்பட்ட மகன் பிறந்து இருக்கிறான். வேறு எந்தக் காரணமும் இல்லை!

ராஜா: சரி! சக்கிலியனின் தொழில் செத்த விலங்குகளின் தோலை உரிப்பது, வெட்டுவது. இதன் பாதிப்புத்தான் உன் கருவில் ஏற்பட்டு இருக்கிறது. சக்கிலியனின் குணம் இவனிடத்தில் கலந்திருக்கிறது. நல்லது. உன்னையும் உன் மகனையும் நான் விடுவிக்கிறேன். இப்போதில்

இருந்து அப்படிப்பட்ட தவறை ஒருபோதும் நீ செய்யக்கூடாது.

அதற்குப் பிறகு மகராஜா தன் இராஜ்ஜியத்தில் ஓர் அறிவிப்பு செய்தான். ''ஒவ்வொரு இந்துப் பெண்ணும், சக்திக்கேற்ப, தங்கத்திலோ வெள்ளி யிலோ மோதிரம் செய்து அதில் முகம் பார்க்கும் கண்ணாடியைப் பதித்து அணிந்து கொள்ள வேண்டும்'' என்று ஆணை பிறப்பித்தான். விடியற்கா லையில் எழுந்து கொள்ளும்போது முதன்முதலில் தன் விரலின் மோதிரக்கண்ணாடியைப் பார்க்க வேண்டும் என்பதை வலியுறுத்தினான். அப்போதுதான் குலப் பெருமை குலையச் செய்யும் குழந்தை பிறக்காது என்பதையும் புரியவைத்தான்.

மகராஜா ஆணையிட்டதுதான் தாமதம்; எல்லா இந்துக்கள் வீட்டிலேயும் கண்ணாடியை மோதிரத்தில் பதித்து பெண்கள் அணிந்து கொண்டனர். இன்றுகூட ஆயிரக்கணக்கான இந்துக்களின் வீட்டில் இப்பழக்கம் இருந்து வருகிறது. மகராஜா இரஞ்சித் சிங் எத்தனை பெரிய தீர்க்கதரிசி! வருணாசிரம தர்மத்தையும் வருண அமைப்பையும் ஏற்றுக்கொள்வதில் எவ்வளவு திடமாக இருந்திருக்கிறான். அது மட்டுமல்ல, எந்த அளவிற்கு மனித இனத்தைக் காப்பாற்றும் காவல்கார ராகத் திகழ்ந்திருக்கிறான். இதுவே இதற்கு கண்கூ டான உதாரணம்.

இந்த வருணாசிரம தர்மத்தைப் பின்பற்றாமலும், வருண ஏற்பாட்டை மதிக்காமல் இருப்பதாலும்தான், பயங்கரமான விளைவை நாம் எதிர்நோக்க வேண்டி யுள்ளது. வருணாசிரம தர்மம் வெட்ட வெளியில் துவம்சம் செய்யப்பட்டு வருகிறது. வருணக் கலப்பு ஏற்பட்டுக் கொண்டு இருக்கிறது. எங்கு நோக்கினும் பசுவதைத் தடுப்புச் சட்டத்திற்கு எதிராக சதி

உருவாகிக் கொண்டு இருக்கிறது. நாடு முழுவதும், முட்டை, மாமிசம், மீன் உண்பதற்கான பிரசாரம் மும்முரமாக நடைபெற்றுக் கொண்டு இருக்கிறது. மனிதாபிமானம் என்பது கொஞ்சமாவது இருந்தாலும், கோமாதாவை எதிர்த்து, தர்மத்திற்கு விரோதியாக ஒருபோதும் எவனும் முற்படமாட்டான். உண்மை யான மனிதனாவதற்கு வருண அமைப்பை ஏற்றுக் கொள்ளுதல் என்பது இன்றியமையாதது.



# ஆநிரைச் சேவையால் எமவேதனை விலகியது

(எழுதியவர்: ஸ்ரீ பிக்ஷு கௌரி சங்கர்ஜி)

ஒரு மனிதன் வாழ்நாள் முழுவதும் பாவம்தான் செய்தான். ஒரு நாள் வீதியிலே அடிபட்டுக் கிடந்த பசுவைப் பார்த்தான். உடம்பில் அழுகிப்போன காயம் ஒன்று இருந்தது. துர்நாற்றம் வீசிக்கொண்டு இருந்தது. புழுக்கள் நெளிந்தன. அந்தப் பசுவின் மீது அவனுக்கு இரக்கம் ஏற்பட்டது. ஒருவிரலால் புழுக்களை வெளியே எடுத்தான். அதே விரலினால் தினமும் முதலுதவி செய்து வந்தான். காயம் நாளாக நாளாக ஆறத்தொடங்கியது. துர்நாற்றம் குறைந்துபோனது. பசு முற்றிலும் நலமாகி ஊரை வலம் வரத்தொடங் கியது.

அம்மனிதன் இறந்தபிறகு எமலோகம் அடைந் தான். தனது கெட்ட செயல்களை எல்லாம் நினைத்து வருந்தினான். பசிதாகத்தால் தவித்துக் கொண்டு இருந்தான்.

எமராஜன் விசாரித்த பிறகு அம்மனிதன் வாழ் நாள் முழுவதும் 'பாவமே செய்து பாவியானவன்' என்பது ஊர்ஜிதமானது. அவன் செய்த ஒரே ஒரு நற்செயல் விரலால் பசுவின் காயத்தில் இருந்த புழுவை வெளியே எடுத்தது. மேலும் அதற்கு முதலுதவி செய்தது. எமராஜன் ஆனந்தப்பட்டு, அவனது விரலை சுவைக்கச் சொன்னான். கட்டளை பிறப்பித்ததும், அவ்விரலை வாயில் வைத்து சுவைக்க லானான். விரலில் இருந்து பாலமுதம் பொங்கி வந்தது. அதை அருந்தி பசி-பிணி போன்றவற்றில் இருந்து அவனுக்கு விடுதலை கிடைத்தது.



## கோமாதாவைப் பழிப்பவன் மனிதனல்லன், அரக்கன்

**(காஷ்மீர் தேசத்து ஸ்ரீ பிரதாப்சிங்கின் வாழ்க்கை யில் நடந்த உண்மை நிகழ்ச்சி)**

**ஆசிரியர்: பக்த ஸ்ரீ ராமசரண் தாஸ்ஜி)**

காலஞ்சென்ற காஷ்மீர் நாட்டு மகராஜா ஸ்ரீபிர தாப் சிங் பெரிய தர்மவான்; பசுவையும் பிராமணனை யும் போற்றி வந்தவன். பழங்கால தருமத்தை திடமாக கடைப்பிடிப்பவன்; வேதசாஸ்திரங்களில் நிபுணன்; ஐம்புலன்களையும் அடக்கி ஆண்டவன்; அறக்கொற்ற வன்; மக்கள் காவலன்; நூற்றுக்கணக்கான அந்தணர் கள் தினமும் அவனது மாளிகையில் வேத விஞ்ஞாப னம், சண்டி மந்திரம், ஜப அநுஷ்டானங்கள் செய்து வந்தனர். எனவே, பசுவதை யாரும் செய்யுவில்லை. இவ்வளவு ஏன்? விரலை உயர்த்தி தவறாக நா அசைக்கக்கூட ஆளில்லை!

ஒருமுறை, பரம பிரதாபியான காஷ்மீர் நாட்டு அரசன் மகராஜா பிரதாப்சிங் இரத கஜ துரக பதாதிகளோடு எங்கோ ஊர்வலமாகச் சென்று கொண்டு இருந்தான். வழியில் ஒரு பசுமாடு படுத்திருந்தது. இதற்கு அரண்மனைக் காவல்காரர்க ளில் சிலர் அதன் அருகே சென்று அப்பசுவை எழுப்பினார்கள்; பிறகு அதைச் சாலையைவிட்டு விரட்டினார்கள்.

சிப்பந்திகள் இப்படி ஒன்று சேர்ந்து செய்த கோஷத்தைக் கேட்டு, மகராஜாவின் கவனம் அவர்கள் பக்கம் திரும்பியது. ஒருவனை அருகில் அழைத்து வினவினான், ''என்ன அங்கே கூச்சல்?''

''மகராஜா! தங்களின் ஊர்வலம் செல்லும் வழியில் ஓர் பசு உட்கார்ந்து இருந்தது. இப்போது அதை விரட்டியடித்து வழியை சரி செய்து விட்டார் கள். சாலையில் இப்போது எந்தத் தடையும் இல்லை'' பதில் கிடைத்தது.

தன்னால் பசுவிற்கு கஷ்டம் ஏற்பட்டதை நினைத்து மகராஜா பிரதாப்சிங் வருந்தினான். மக ராஜா மிகவும் கவலைப்பட்டு ஊர்வலத்தை நிறுத்தி னான். பசுவை வழியில் இருந்து விரட்டியடித்த சிப்பந்திகளை அழைத்து, குற்றம் சாட்டியவாறு இரைந்தான்—

''நீங்கள் எல்லோருமாக சேர்ந்துகொண்டு எவ்வ ளவு பெரிய பாவத்தைச் செய்திருக்கிறீர்கள்? பசு-பிராமணர்களைப் போற்றி அரசாட்சி செய்வதுதான், நமது வாழ்க்கையின் தலையாய குறிக்கோள் என்பது உங்களுக்குத் தெரியாதா? பசுக்களுக்கும் பிராமணர்க ளுக்கும் பணி செய்வதும், இவ்விரு உயிர்களைக்

காத்தலும் மனித இனத்தின் முக்கிய பண்பாகும். க்ஷத்திரிய அரசனான எனக்கு, பசுவை அவமதித்து நீங்கள் மிகப் பெரிய இழுக்கு தேடித் தந்துள்ளீர்கள்! நீங்கள் மனிதர்களா? இல்லை அரக்கர்கள்! இனி ஒருபோதும் இப்படிச் செய்யக்கூடாது. ஒருவேளை இப்படிச் செய்தால், வேலையில் இருந்தே நீக்கப்பட்டு விடுவீர்கள், எச்சரிக்கிறேன்'' மகராஜாவின் கோபத்தினையும், மனிதாபிமானத்தையும் கண்டு எல்லோரும் வியப்பில் ஆழ்ந்தனர். பிறகு சிறிது நேரத்திற்கெல்லாம் 'மகராஜாவுக்கு ஜே!' என்ற கோஷம் வானை எட்டியது. ஊர்வலம் முன்னே சென்றது.



# பசுபக்தியின் நற்பயன்கள்

## (உண்மைச் சம்பவங்கள்)

## (1)

கோல்ஹாபூர் மற்றும் பிரிட்டிஷ் ராஜ்ஜியத்திற்கு இடைப்பட்ட எல்லைப் பகுதியில் துந்தகி என்றொரு கிராமம். கிராமத்துக் கோவிலில் ஒரு பசு இருந்தது.

சுமாராக 100 ஆண்டுகளுக்கு முற்பட்ட நிகழ்ச்சி. சில கசாப்புக்காரர்கள் கோல்ஹாபூர் ராஜ்ஜியத்தில் பசுக்களை விலைக்கு வாங்கி ஆங்கிலேய நாட்டு வழியாக இந்த கிராமத்துக் காட்டை அடைந்தார்கள். அவைகளில் சில கன்றுக்குட்டிகள். 'வாழ்க்கையின் மறுகரைக்குப் போகிறோம்' என்பது இவைகளுக்கு எப்படித் தெரியும்! ஆனால் ஒன்று...வழக்கத்திற்கு மாறாக கொடூரக் கரங்களில் பிடிபட்டு இருப்பதை அவைகள் உணர்ந்தன. எப்படியாவது இவர்களது

கைகளில் இருந்து துள்ளித் தப்பிவிட வேண்டும் என்று எண்ணின. அவைகளின் முதுகில் கசாப்புக்கார னின் தடியாவர்த்தனம் ஆகிக்கொண்டே இருந்தது. இருந்தாலும் எப்படியாவது தப்பிவிட வேண்டும் என்று துடிதுடித்துக் கொண்டே இருந்தன. அவைக ளில் ஒரு மாடு மட்டும் எப்படியோ தப்பி, அந்தக் கிராமத்துத் தலைவனின் வீட்டில் புகுந்து கொண்டு விட்டது. கசாப்புக்காரர்களின் எடுபிடியாட்கள் பின் னாலேயே ஓடினார்கள். ஆனால் பிடிக்க முடிய வில்லை.

கசாப்புக்காரர்களையும் பசுக்களையும் பார்த்து கிராமத்து இடையர்கள், தங்களிடம் இருந்த பசுக்க ளையும் அவிழ்த்து விட்டனர். அப்போது கசாப்புக்கா ரர்களுக்கும் இடையர்களிடையேயும் வாக்குவாதம் நடந்தது. 'தஞ்சம்' என்று வந்த உயிரை இந்துக்கள் எப்படி உதறித் தள்ளுவார்கள்? இந்து தர்மத்தில் சொல்லப்படுவதாவது:

''தஞ்சமென்று தேடிவந்தோரை
நெஞ்சமின்றி நிலைகுலைப்பவர்கள்
மிஞ்சும்பாவ மெய்துவதோடு
தஞ்சமற்றுக் கீழ்மகனாவரே.''

எனவே 'சரணாகதி தர்மம்' முதலானது. அது மட்டுமல்லாமல் கோமாதாவைக் காப்பாற்றல் அதை விட முக்கியமானது. இதற்காக அல்லவோ முன்னோர் கள் எல்லோரும் உயிரையும் அர்ப்பணித்து இருக்கி றார்கள். இந்து தர்மத்தை வாழையடி வாழையாகப் பின்பற்றி வரும் இந்த ஆயர்குல இடையர்களும் இதை எப்படி விட்டு விடுவார்கள்? வீணான தர்க்கம் வளர்ந்தது. ''ஆமாம்-இல்லை'' என்ற பேச்சு

தொடர்ந்தது. அந்த மாட்டின் விலையை ரூ.50க்கு பேரம் பேசுமளவிற்கு வந்தது. கடைசியில் பீனல் கோடில் (Penal code) கூறியவற்றைப் பற்றி சிந்திப்ப தற்கு முன்னால், தடியடி நடந்தது. ஒருபக்கத்தில் இந்த 3-4 கசாப்புக்காரர்கள், மறுபக்கம் கிராமத்து மக்கள். கசாப்புக்காரர்களின் வீராவேசம் குறையத் தொடங்கியது. பிறகு அரசாங்க தர்பாரை நோக்கி நடந்தார்கள். அவர்களுக்கு ஆங்கிலேயர்களின் துணை இருந்தது. ஆனால், கிராமத்து தலைவனுக்கோ அவனது தர்மபலம் இருந்தது. அதனால்தான் அப்பசு தானாகவே அவன் இல்லம் புகுந்து புகலிடம் தேடிக்கொண்டது. இருவருக்கும் இடையே சண்டை முற்றியது. அரசாங்கத் தரகர்கள் புகார் கொடுத்தார் கள். மகராஜா தலைவனை இழுத்துவரச் சொன்னார். கிராமத்து மக்கள் பசுமாட்டோடு மகராஜா முன் வந்து நின்றனர். பசுமாட்டை அவர் எதிரே நிறுத்தி அனைத்து நிலைமைகளையும் எடுத்துரைத்தனர்.

''நீங்கள் பசுவையும் பிராமணர்களையும் போற்றி வருபவர்; பேணிக்காப்பவர்; இதைத் தங்களிடம் ஒப்படைக்கிறோம். விரும்பினால் கசாப்புக்காரர்களி டம் கொடுங்கள்; இல்லை பிரிட்டிஷ்காரரிடம் கொடுங் கள்; இல்லை கிராமமக்களிடம் கொடுங்கள், இது சம்பந்தமான முடிவெடுக்கும் உரிமை உங்கள் கைக ளில் ஒப்படைக்கப்பட்டது''. மகராஜா கிராமத்தார் சொல்லியவற்றை யோசித்துப் பார்த்தார். அப்பசுவை கிராமத்தாரிடமே ஒப்படைத்தார். பிறகு கோல்ஹாபூர் ஆட்சியில் யாரும் கசாப்பு வியாபாரம் செய்யக் கூடாது என்று சட்டம் இயற்றினார்.

இந்து தர்மத்தின் பார்வையில், இதைப்பொறுத்த வரை எந்த நவீனமும் ஏற்பட்டதாகச் சொல்வதற்

கில்லை. ஆனால், இதனை அடுத்துக் கூறப்போகிற நிகழ்ச்சி நெஞ்சத்தை நெகிழ்விக்கக்கூடியது. கிராமத் தார் இப்பசுவை கிராமத்தின் சிவாலயத்திற்கு அர்ப்ப ணித்தார்கள். அப்போதிலிருந்து இறுதிக்காலம் வரை யில் பசு அங்கேயே இருந்தது. எவருடைய நிலத்திற் கும் வராது; எந்த வயலையும் எட்டிப் பார்க்காது; எந்த விலங்கோடும் மோதாது. அதன் சந்ததியைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமா?...பூப்பே எய்தவில்லை! பிறகு பிரசவத்தைப் பற்றி என்ன கூற? சிவாலயத்தில் அர்ப்பணிக்கப்பட்ட நாள் தொடங்கி இறுதிவரை, சிவன்கோயிலின் அன்றாட பஞ்சாமிருதத் திற்கு அரைச் சேர் பால் அப்பசு கொடுத்து வந்தது.

## பசுக்கள் அளித்த சாட்சியம் (2)

சதாரா ஜில்லாவைச் சார்ந்த,கராட் தாலுக்காவில் சிரம்பா என்ற பெயருடைய ஒரு கிராமம் இருக்கிறது. இங்கு வசித்து வந்த கோவிந்ததாஸ் மகராஜ் தீவிரமான கோபக்தர். நம் நெஞ்சிலே இடம் பிடிக்கக்கூடிய ஒரு நிகழ்ச்சி. இவருடைய மடத்தில் அவர் உட்காரும்-சயனிக்கும் இடம் தவிர மற்ற எல்லா இடங்களிலும் பசுக்கள் கட்டப்பட்டிருக்கும். பசுக்களுக்கும் கன்றுகளுக்கும் சேவை செய்வதிலேயே தன் முழுநேரத்தையும் அவர் செலவழித்து வந்தார். ஒருமுறை இவரது சில பசுக்கள் காணாமல் போயின. பக்கத்தில் இருந்த தாசில்தார் அலுவலகத்தில் புகார் கொடுத்தார். அப்படியே காலார நடந்து 'வேல்வட்' அங்காடியை அடைந்தார். தொலைந்து போன பசுக் களை அங்கிருந்த கசாப்புக் கடையில் கண்டார். உடனே காவல் நிலையத்திற்குச் சென்று புகார்

கொடுத்தார். கசாப்புக்காரர்கள் சில சாட்சியங்களை நிலைநிறுத்தினார்கள். பசுக்கள் தம்முடையவை என்று குரல் கொடுத்தார்கள். மேலும் ஏதேனும் சாட்சியத்தை காட்டி நிருபிக்கச் சொன்னார்கள். ''எங்கள் பசுவே இதற்கு சாட்சி தரும் என்று சொன்னார்கள். எங்கள் சார்பில் எங்கள் பசு நிச்சயம் சாட்சி கூறும் என்று தம் கருத்தை வலுப்படுத்தினார்கள். இதைக் கேட்டுப் பலர் சிரித்தார்கள்.

பேசத் தெரியாதவைகள் சாட்சி கூறுமோ? ஆனால் ஆழ்ந்த ஈடுபாட்டிற்கும் பக்திக்கும் எதுவும் கடினம் இல்லை! இருந்த இடத்தில் இருந்து அசையாத இறையுருவமான மூர்த்தியே பற்பல வேண்டுதல்களை நிறைவேற்றுகையில், காசினி முழுவதும் காலார நடந்து, உலகையே காத்தருளும் கோமாதா, தம்மீது காட்டிய பக்திக்காக மனமிரங்கி ஏன் சாட்சி கூறாள்?

கோவிந்ததாசரின் சாட்சி யார் என்று தாசில்தார் கேட்கையில், அவர் பசுக்களையே சுட்டிக்காட்டினார். ''சாட்சியைக் கேட்டால் பசுக்களையே சுட்டிக் காட்டு கிறீரே, இப்பசுக்கள் உங்களுடையவைதான் என்பதற்கு என்ன ஆதாரம்? தாசில்தார் கடுகடுத்தார்.

''சாட்சியா?' உலகில் உள்ள அனைத்துப் பசுக்களும், தவசிகளாக இருக்கும் பிராமணர்களான எங்களுடையவை! விருப்பப்பட்டால் நீங்கள் சாஸ்திரங்களைக் கூடப் புரட்டிப் பார்க்கலாம்''.

''என்ன சொல்கிறீர்...நீங்கள் சொல்வது வேண்டுமானால் துவாபர யுகத்திற்கு ஒத்துப் போகலாம். ஆனால் நாம் வாழ்ந்துகொண்டு இருப்பது கலியுகத்தில்! நினைவிருக்கட்டும்...எனவே இவை தங்களுடையவை என்றால், ஏதேனும் ரசீது-பத்திரம் இருந்தால் அதைக்காட்டி நிருபியுங்கள். அப்படி ஏதாவது

அத்தாட்சிக் காகிதம் தங்களிடம் இருக்கிறதா? கூறுங் கள்!'' தாசில்தார் படபடத்தார்.

''ரசீது பத்திரம் என்ற வகையில் என்னிடம் ஏதும் இல்லை! இந்த கோமாதாக்கள்தாம் என் சாட்சியங்கள்! நிரூபணங்கள்! நான் இவைகளை கூப்பிடுகிறேன். இவைகள் என் குரலைக் கேட்டு ஓடிவந்து தமது அன்பை வெளிப்படுத்தினால், இவை என்னுடையவைதான் என்பதை ஏற்றுக்கொள்வீரா?''

தாசில்தாரும், பிரதிவாதியும் ஏற்றுக்கொண்ட பிறகு, கோவிந்ததாஸ்ஜி பசுக்களை அழைத்தார். ''கங்கா, கோதா, யமுனா, கிருஷ்ணா, சாவித்ரி! என் தாய்மார்களே வாருங்கள்!...வாருங்கள்!... அம்மாக் களே! மகன் அழைக்கிறேன், வாருங்கள்!'' இப்படி பசுக்களைத் தன்பக்கம் வசீகரிக்க 'வா' 'வா' என்று கையால் சைகை செய்த உடன், கயிற்றை அறுத்துக் கொண்டு ஓடிவந்தன. அவரது முகத்தை அன்பால் நக்கத் தொடங்கின. கசாப்புக்காரர்கள் உட்பட எல் லோரும் இக்காட்சியைக் கண்டு வியப்பில் ஆழ்ந்த னர். கோவிந்ததாஸ்ஜியைப் பின் தொடர்ந்து ஒன்றன் பின் ஒன்றாக அழைத்த பசுமாடுகள் அனைத்தும் மடத்தின் உள்ளே நுழைந்தன. தத்தமது இடத்தில் சென்று நின்றுவிட்டன. வேல்வட் அங்காடியில் அன்றையில் இருந்து கோவிந்ததாஸ்ஜிக்கு ஓர் தனி மரியாதை கிடைக்கத் தொடங்கியது.



# என் கபிலியே!

# (3)

(கபிலி, தௌரி, கபரி-தம் பசுக்களுக்கு கோவிந்ததாஸ்ஜி வைத்த பெயர்)

ஆவணி மாதம் கிருஷ்ணபட்சம் 10ஆம் நாள் (தேதி 10.10.17) தொலைந்துபோன பசுக்களுக்காக வேல்வட் அங்காடிக்கு வந்தார். ஒரு பசுவைப் பார்த்ததும் நின்றுவிட்டார். அங்கு நின்று கொண்டிருந்த கோ-சேவகர்களிடம் கூறினார். "இதோ பார்! இதுதான் என் கபிலி. இப்போது இதன் நிலையைப் பார்த்தாயா? பார்த்தாயா? இதுதான் கபிலி. இது போல எத்தனை பசுமாடுகள் தகவல் இல்லாமல் தலைமறைவாக இருக்கின்றனவோ? இதோ பார், இதுதான் என் தௌரி! அதுதான் என் கபரீ!...கடவுளே! எதுவரையில் நீ என்னைப் பரிட்சித்துப் பார்க்கப் போகிறாய்? இத்தனை இந்துக்கள் உயிருடன் இருக்கும்போதே, பசுக்களின் கழுத்திற்கு கத்தி தீட்டப்படலாமா? இந்துக்களா நாங்கள்? எப்படிச் சொல்வது? என்னையே நான் என்ன சொல்வேன்... இந்த இந்து இனத்திலேயும் அந்தணன். நான் உயிருடன் இருக்கும்போதே இவை அனைத்தும் நிகழ்கின்றன. இந்த அவல நிலைகண்டு இன்னும் நான் உயிரோடு இருக்கிறேனே! இப்படிப்பட்ட வாழ்வும் ஒரு வாழ்வா? கோபால கிருஷ்ணா! இந்த உயிரை இன்னும் ஏன் இம்மண்ணில் உலவ வைத்திருக்கிறாய்? கபிலி!..." இப்படித்தன் வருத்தம் நிறைந்த குரலுடன் கூவிக்கொண்டே இருந்தார். அங்காடியில் ஒரு மூலையில் இருந்து மறுமுனைவரை பலமுறை நடந்துகொண்டு இருந்தார். நூறுமுறைக்கு மேல் கபிலியின் பெயரைக்கூறிக் கூவிக் கொண்டே

இருந்தார். அங்கு கூடியிருந்த எல்லா மக்களின் கவனம் இப்போது அவர்பக்கம் திசை திரும்பி இருக்கிறதே என்பதை அவர் சற்றும் பொருட்படுத்த வில்லை!

அவர் முன் எல்லாப் பக்கங்களிலும் கபிலி, தௌரி, கபரீயின் உருவங்கள் தென்படுவதாக உணர்ந் தார். அவரது பார்வை முழுதும் அதன்மேல்தான் பட்டது. அவரது உடல் ஸ்தம்பித்தது. அவர் சிலையானார். ஒருமுறை ஆகாயத்தை நோக்கிப் பார்த்தார்; பிறகு தன் பசுக்களைப் பார்த்தார். கைகளைச் சேர்த்து வணங்கினார். கூடியிருந்த இடையர்களுக்கும் வணக்கம் செய்தார். 'கோபால கிருஷ்ணா!' என்று ஒருமுறை அழைத்தார். ''ஓ என் கபிலியே!' என்று அழைத்து, பூமியின்மீது சாய்ந்தார். இதைக்கண்டு மக்கள் இங்குமங்குமாக ஓடினர். 8-10 பசுக்கள் இந்தக் குரலைக்கேட்டு தம் கயிறுகளை அறுத்துக்கொண்டு ஸ்வாமிஜியின் அருகில் வந்தன. அவரது முகத்தை அன்போடு நாக்கால் சுவைத்தன. ஆனால் அப்போது அவர் இங்கு இருந்தால்தானே! கோபாலகிருஷ்ணனையும் கோமாதாவையும் நினைத் துக்கொண்டே இவ்வுலகை நீத்துவிட்டார். சிரம்பா கிரமத்தில் கோவிந்ததாஸ்ஜியின் ஈமக்கிரியை நடை பெற்றது. வேல்பாடியில் அவரது ஞாபகார்த்தமாக கோயிலும் கட்டப்பட்டது.

## (4)

கி.பி.1896-ல் மகாராஷ்டிராவிலும், கர்நாடகாவி லும் பயங்கரமான பஞ்சம் ஏற்பட்டது. ஏழை-எளியவர், பசுமாடுகள்-காளைமாடுகள் மற்ற விலங்கு கள் பசியால் வாடி மடிந்தன. பீஜப்பூர் நாட்டின் 'லமாண்' சாதியைச் சேர்ந்த சிலர், வயிற்றுப் பிழைப்புக்காக கோல்ஹாபூர் ராஜ்ஜியத்தின் சின்சலி

கிராமத்தை அடைந்து, வாழத் தொடங்கினார்கள். அவர்களிடம் பல பசுமாடுகளும் காளைமாடுகளும் இருந்தன. இவர்கள் பெயரளவிற்கு ஏதோ ஒரு விலைக்கு தங்களது பசுக்களையும், காளைகளையும் விற்றனர். கசாப்புக்காரர்களுக்கு சாதகமான காலம். சில நாணயங்களுக்காக மிகக் குறைந்த விலையில் எல்லாப் பசுக்களும் காளைகளும் விற்கப்பட்டன. கசாப்புக்காரர்கள் சவுக்கடி அடித்து மாடுகளை ஓட்டிச் சென்றனர். பசுக்களும்-காளைகளும் பசியால் வாடின; தடியடியால் வருந்தின; ஓரடி கூட முன்னால் அவைகளால் எடுத்து வைக்க முடியவில்லை! வழியில் ஓர் அனுமார் கோவில் இருந்தது. இவற்றுள் ஒரு பசு வீர அனுமானைத் தனது காப்பாளராகப் பாவித்து மிகவும் கஷ்டப்பட்டு கூட்டத்திலிருந்து தப்பி ஓடி, கோயில் முன் அமர்ந்தது. கசாப்புக்காரர்கள் கசையடி கொடுத்து அதை எழுப்ப முயற்சித்தார்கள். ஆனால் அது எழுந்து கொள்ளவில்லை. 60-70 காயங்கள் ஏற்படுமளவிற்கு அடித்து ஓய்ந்தார்கள். ரத்தம் வெளிவந்தது. கண்களிலிருந்து கண்ணீர் பெருக்குற்றது. பரிதாபமாக நான்கு புறங்களிலும் சுற்றிச்சுற்றிப் பார்த்தது. யாரேனும் இரக்க குணம் படைத்தவர் வருவாரா என்று ஏங்கிக் கிடந்தது. கிராமத்து தனவான் சுல்தான் பால்கௌடா பாட்டில் அப்பக்கமாக வந்தார். அவரால் இதைச் சகிக்க முடியவில்லை. கசாப்புக்காரர்களுக்கு எவ்வளவோ எடுத்துச் சொன்னார். ஆனால் இரக்கமில்லாத மனத்தை அவர்கள் மாற்றிக் கொள்ளவில்லை. பாட்டில் கிராமத்து மக்கள் அனைவரையும் அழைத்து வந்தார். கிராமத்து மக்களும் அனைத்துப் பசுக்களுக்கும் விற்ற விலையைவிட அதிகம் கொடுத்து திருப்பி மீட்டார்கள். ஆனால் உட்கார்ந்து கொண்டிருந்த பசுவை வாங்க யாரும் முன்வரவில்லை. பாட்டில் சிறு தொகை கொடுத்து அதை விலைக்கு வாங்கி, விடுவித்தார்.

''கோமாதா இப்போது எழுந்திரு'' என்று பாட்டில் குரல் கொடுத்தவுடன் அப்பசு எழுந்து நின்றது. எல்லா மக்களும் ஆச்சரியப்பட்டார்கள். 8-10 நாட்களுக்கு மருந்து கொடுத்து பராமரித்ததால் பசு தேறியது. பாட்டில் வீட்டிற்கு பசு காலடி வைத்த நாள் தொடங்கி அதிருஷ்ட தேவதையும் குடி புகுந்தாள்! திருமகளின் பார்வையால் கனகமழை பொழியத் தொடங்கியது.

பாட்டிலின் இந்த திடீர் வளர்ச்சியைக் கண்டு பொறாமைக்காரர் சிலர் பொங்கினார்கள்; வயிற்றெரிச்சல் அடைந்தார்கள். ஒரே வருடத்திற்குள்ளாக 'பசு வைத் திருடியதாகக் குற்றஞ்சாட்டப்பட்டு கைது செய்ய வாரண்டுடன் வந்தார்கள் அரசாங்கத்தார். அவரது உற்றார் உறவினர் அழுதார்கள். ஆனால், பாட்டில் ஒன்றும் பேசவில்லை. அவரிடமிருந்து பசு பிடுங்கப்பட்டது. பசுக்கள் கதறின. ஆனால் அதை இழுத்துச் செல்ல யாருக்கும் துணிவு ஏற்படவில்லை! ஏனென்றால், மிகவும் கோபத்தோடு, கொம்புகளை முன்னே நீட்டியவாறு மிகவும் கூர்மையான பார்வையால் பார்த்துக்கொண்டு இருந்தது. ஒருவேளை 10-20 ஆட்கள் ஒன்றாகச் சேர்ந்துகொண்டு அதை அடக்க நினைத்தாலும், அனைவரையும் முட்டி நொறுக்கிவிடும் ஆவேசம் அதன் கண்களில் தென்பட்டது, கோபம் நெருப்புப் பொறிகளாகப் பறந்தது. அடக்குவதற்கு இதைத்தவிர எத்தனையோ வழிகளும் இருந்தன. அதில் முதலாவதாக எல்லோரும் சேர்ந்து கொண்டு தடியால் அடிக்கத் தொடங்கினர். பாட்டிலால் இதைப் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. பசுவை அவர் அவிழ்த்துவிட்டார். அரசாங்கத்தார் அதை விரட்டியவாறு, பொதுப் பவுண்டிற்கு விரட்டிச் சென்றனர்; அங்கேயே கட்டி வைத்தனர். பசு ஏதும் அருந்தவில்லை; சாப்பிடவும் இல்லை. அப்படியே

எட்டு நாட்கள் நின்ற இடத்திலேயே ஸ்தம்பமாக நின்றது. இதைக்கேட்டு மேஜிஸ்ட்ரேட்டுக்கு இரக்கம் வந்தது. மேலும், சுல்தான் பாட்டிலிடமே பசுவை ஒப்படைக்கும்படி கட்டளையிட்டார்.

வழக்குத் தோற்றது. அதை மேலும் தொடர்ந்து நடத்தினார்கள், சிலர் இந்துக்கள்...அதிலும் சில அந்தணர்களும் இருந்தார்கள். பக்கத்துக் கிராமத்தில் இருந்து ஒரு தலைவன் கொண்டு வந்து நிறுத்தப்பட்டான். அவன் சார்பில் வழக்குமனு தாக்கல் செய்யப்பட்டது. வழக்கும் பதிவு செய்யப்பட்டது. போலீஸ் இன்ஸ்பெக்டர் சாட்சி கோரினார். பாட்டில் எல்லா விஷயங்களையும் உள்ளபடியே விவரமாக எடுத்துச் சொன்னான். எந்த சாட்சியமும் தன்னிடம் அந்நேரத்தில் இல்லையென்றும் சொன்னான்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் உண்மை பொய் இரண்டையும் நன்கு ஆய்ந்து பார்த்தார். வழக்கு தொடுத்தவன் அப்பசுவை எந்தக் கிராமத்தில் இருந்து வாங்கியதாகக் கூறினானோ, அங்கேயே அப்பசுவை அவிழ்த்துவிட ஆணையிட்டார். பசுவும் அவிழ்த்துவிடப் பட்டது. வழக்கு தொடுத்தவன் வீட்டிற்கோ, இல்லை விற்றவனுடைய வீட்டிற்கோ அது செல்லவில்லை. ஆனால் அங்கிருந்து 5 மைல் தொலைவில் சின்சவி கிராமத்தில் இருந்த சுல்தான் பாட்டில் வீட்டிற்குள்தான் புகுந்தது. இறுதியில் வாய்மைக்கு வெற்றி கிடைத்தது. அரசின் ஆணைப்படி, தக்க மரியாதையோடு, அப்பசு பாட்டிலின் வீட்டிற்கே திரும்பிக் கொண்டுவந்து விடப்பட்டது. இதனால் பசுவிற்கும் பாட்டிலுக்கும் பாட்டிலின் உற்றார்க்கும் மிகுந்த ஆனந்தம் ஏற்பட்டது.

அந்தப் பசு 4 ஆண் கன்றுக் குட்டிகளையும், 3 பெண் கன்றுக் குட்டிகளையும் ஈந்தது. அது தினமும் 3 சேர் பாலும் கொடுத்து வந்தது. வழக்கம்போல

ஒருநாள் அது புல்மேயப் புறப்பட்டது. மேய்ந்து கொண்டு இருக்கும்போதே ஒரு மரத்தின் கீழே அமர்ந்தது. அப்போதே அதன் உயிரும் பிரிந்தது. பாட்டில் அதன் ஞாபகார்த்தமாக, அதன் சமாதியின் மேல் ஒரு கோயிலைக் கட்டினார். அந்தப் பசுவின் வம்சம் வாழையடி வாழையாக நன்கு வளர்ந்து வந்தது. 'விற்பதில்லை' என்ற நிபந்தனையை ஏற்றுக் கொள்பவர்களுக்கு இதன் கன்றுகுட்டிகளை பாட்டில் தானமாகக் தந்து வரலானார். இவ்வாறு பாட்டிலின் பசுபக்திக்கான புண்ணிய பலன் பல பசு பக்தர்களுக் கும் கிடைக்கலாயிற்று.



# ஆநிரைத் தொண்டின் நற்பலன்

### (உண்மைச் சம்பவங்கள்)

(எழுதியவர் : வைத்திய பஞ்சானன் கே.கே. ஸ்ரீநிவாசாசார்யா)

## உயிர்ப் பிச்சை

கி.பி.1934 ஆடி மாதம், நோஹர் (பீகாநேர்)இல் இருந்து சுமாராக இரு மைல் கல் தொலைவில், டாலுராம் மகரிஷியின் ஜோஹட்டில் (குளம்) 15 நாட்களுக்கு முன் கொஞ்சம் மழை பெய்தது. அதனால் சற்று சேறும் சகதியுமாக இருந்தது. தாகத்தால் தவித்துக் கொண்டிருந்த ஓர் பசு ஜோஹட் டிற்கு வந்தது. ஆனால் அங்கிருந்த முழங்கால் அளவு சேற்றில் சிக்கிக் கொண்டது. பசுவின் முகத்திலேயே வயோதிகம் தெரிந்தது. வெளியேற வேண்டும் என்று இடைவிடாது முயற்சித்துக் களைத்துப்போய் இருந்

தது. நின்றுகொண்டே இருக்க முடியாமல், உட்கார்ந்தது; மூழ்கத் தொடங்கியது. சூரியன் மேல்வானிற்கு பவனி வந்து கொண்டு இருந்தான். நீரில்லாத ஓடையின் பக்கம் யார் வருவார்? சேற்றில் மூழ்கிக் கிடந்த பசு இறுதி நிமிடத்தை எண்ணிக் கொண்டிருந்தது. நள்ளிரவில் லேசான தூறலினால் அந்த ஓடையில் நீர் தேங்கத் தொடங்கியது. பசுவின் நிலை கவலைக்கிடமானது. நீருக்கு வெளியே, அப்பசுவின் கொம்புகள், நெற்றி, காதுகள் இவைகள்தாம் மூழ்கியும் மூழ்காமலும் தெரிந்தன. விடியற்காலை வயலில் இருந்து வந்து கொண்டிருந்த ருகா என்ற பொற்கொல்லன், டூங்கர்மல் திவாரியிடம் சென்று செய்தியைத் தெரிவித்தான். அவன் சொன்னதுதான் தாமதம்! இளைஞன் தயாராகிவிட்டான்; தாம்புக்கயிறு, மூங்கில் எடுத்துக்கொண்டு, சில ஆட்களையும் அழைத்துக் கொண்டு விரைவாக குளக்கரைக்கு வந்தான். கால்வாய்கள் மூலமாக குளத்தில் நீர் இன்னமும் நிரம்பிக் கொண்டு இருந்தது. இதனால் பசுவின் நிலை மிகவும் மோசமாகிக் கொண்டு வந்தது. பசுவை உயிருக்கு உயிராக விரும்பும் இளைஞனால் இதனைப் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை! உடனே தன் துணிமணிகளைக் கழற்றிவைத்து நண்பர்களோடு குளத்தில் குதித்தான். பேசிக்கொண்டே மூங்கில் உதவியால் பசுவை மீட்டான். பசுவால் நிற்கக்கூட முடியவில்லை! நடப்பது என்பது அதற்கு இயலாத காரியமாக இருந்தது. மரம் போடப்பட்டது. பசு கட்டை வண்டியில் ஏற்றப்பட்டது. பொதுத் தொழுவத்திற்கு அனுப்பி வைக்கப்பட்டது. பசுவின் உடல்நிலை தேறியது. ஆனால் இரண்டு மாதங்களுக்குப் பிறகு கால்நடைகளுக்கு வரும் ஏதோ ஒரு நோயினால் அது இறந்து போனது.

இதே வருடம் டூங்கர்மல், சர்தார் ஷஹருக்கு அருகிலுள்ள தேவாதஸர் எனும் சிற்றூருக்குச் சென்றான். அங்கிருந்து திரும்பும்போது, தனது மாமா ஹேதராம் வீடு உள்ள சுரூ கிராமத்தில் இறங்கிவிட்டான். 12ஆம் தேதி, அவனுக்கு 105 டிகிரி ஜுரம் அடித்தது. அதனோடு பயங்கரமான காற்றும் வேறு வீசிக்கொண்டு இருந்தது. மாமாவிடம் தம் வீட்டார் எல்லோருக்கும் சொல்லி அனுப்புமாறு கேட்டுக் கொண்டான். ஹேதராம் இதைப் பொருட்படுத்தவில்லை. ஆனால் இங்கு அவரது அண்ணனின் மனதில் குழப்பம் ஏற்பட்டது. தேவாதஸரில் இருந்து திரும்பும் தேதி எப்போதோ கிடைத்துவிட்டது. ஆனால், இதுவரை டூங்கர் திரும்பாத காரணம் என்னவாக இருக்கும் என்று குழம்பிக் கொண்டு இருந்தான் சகோதரன். எப்போதும் நல்லதை விரும்புபவரின் மனம் 'நடந்துவிடுமோ'? என்ற அமங்கலமானவற்றை நினைத்துக் கவலைப்பட்டுக் கொண்டுதான் இருக்கும். கடைசியில் சகோதர பாசத்தால் வேறு வழியின்றி வண்டியில் ஏறி அமர்ந்தான். வண்டியும் புறப்பட்டது. மாமாவிடம் இருந்து டூங்கர்மாலின் முகவரியைப் பெற்றுச் செல்லலாம் என்று வழியில் வண்டியை நிறுத்தினான். டூங்கர் அங்கு பாயும் படுக்கையுமாகக் கிடந்தான். வைத்தியர் வித்தியாதர் சோதித்துப் பார்த்தார்; பயங்கரமாக மோசமடைந்திருப்பதையும் நிமோனியா தீவிரமாக தாக்கியிருக்கிறது என்பதையும் எடுத்துரைத்தார். வேகவேகமாக சிகிச்சை ஆரம்பமானது. சேவை, மேற்பார்வை யாவும் குறைவில்லாமல் இருந்தது. ஆனால் உடல்நிலையில் எந்தவித முன்னேற்றமும் இல்லை "விஷயத்தை" அனைவருக்கும் சொல்லிவிட்டார். அன்றைய

இரவு ஆபத்தானது என்றும் அடிக்கொருதரம் டூங்கர் மாலுக்கு மருந்து கொடுக்கவும் கூறினார். நோயாளி யின் சகோதரர், பத்ரிநாராயணனின் தைரியமும் குறையத்தொடங்கியது. நோயாளியின் நிலைமை மோசமடைந்தது. உடல் பனிபோல குளிர்ச்சியடைந் தது. இதயத்தில் சில துடிப்புகள் மீதமிருந்தன. டூங்கர்மால் இறுதி அத்தியாயத்தை புரட்டிக் கொண்டி ருந்தான். அப்பாவி பத்ரிநாராயணன், தர்மசாலையின் அறையில், அன்புச் சகோதரனின் கழுத்தை அணைத்து அழுதுகொண்டு இருந்தான். இரண்டொரு நாட்களாக அன்ன ஆகாரம் இன்றி இருந்தான். கண்கள் பூத்துப் போயிருந்தன. தொண்டை வறண்டு போய் இருந்தது; உடல் வாடியிருந்தது; மனதில் அமைதியே இல்லாமல் இருந்தது; ஆனால் டூங்கர் மாலோ, நெடிய நித்திரைக்காக முற்பட்டுக்கொண்டு இருந்தான். தன் சகோதரன் தேம்பித் தேம்பி அழுதுகொண்டிருந்தது அவனுக்குக் கொஞ்சம்கூடத் தெரியாமல் இருந்தது.

பிரம்ம முகூர்த்தம்; கனவு இல்லை, பிரமை இல்லை...9 மாதங்களுக்கு முன்னால் சேற்றில் இருந்து காப்பாற்றிய அதே பசு காட்சியளித்தது. டூங்கர்மால் வியந்தான். நின்றபடியே பசு பேசிற்று. "டூங்கர்! ஒருநாள் என்னை நீ காப்பாற்றினாய். இன்று நான் உன்னைக் காப்பாற்றுகிறேன். உன்நோய் இப்போது குணமடைந்தது. உனக்கு இப்போது எந்த ஆபத்தும் இல்லை". பசு மறைந்தது. டூங்கருக்கு ஞானத் தெளிவு ஏற்பட்டது. தனக்காக தேம்பி அழும் சகோதரனைப் பார்த்தான். ஆனால் இந்திரியங்கள் கட்டையாகக் கிடந்தன. ஞானேந்திரியம், கர்மேந்திரியம் மூலமாக தன் சகோதரனுக்கு ஆறுதல் கூட எந்த விதத்திலும்

அவனால் சொல்ல முடியவில்லை! சற்று நேரம் கழித்து தன் கண்களைத் திறந்தான். பிறகு சைகைகளினால் புரிய வைக்க முற்பட்டான். தன்னால் முடிந்ததை சைகை மூலம் சொல்லி முடித்தான். காலையில் வைத்தியர் வந்தார் தன் நோயாளியின் நிலையில் இப்படி முன்னேற்றம் ஏற்படும் என்பதில் அவருக்கு கொஞ்சம்கூட நம்பிக்கை இல்லாமல் இருந்தது. அப்போது டீங்கர்மால் இரவு கண்ட காட்சியை அவரிடமும் சொன்னான். வைத்தியர் பரம ஆஸ்திகர், உண்மையை ஆத்மார்த்தமாக உணர்ந்தார். நோயாளியின் நலக்கேடு குணமாகி இருந்தது. 'பத்தியம்' என்ற பெயரில் இரண்டு நாட்கள் ஓடின. பிறகு இருவரும் நோஹர் திரும்பினார்கள்.



# நீர் மாற்றம்

சுமாராக கி.பி.1923-ல் சேட் சாதீராம் பசீஸியா கல்கத்தாவில் இருந்து தன் வீடு 'நோஹருக்கு' 'ஸிரஸா' கிராமத்திற்கு வருகையில், ஃபேபானா கிராமத்தில் தங்கினார். 500 வீடுகளின் அமைப்பையும் நான்கு புறங்களிலும் சின்னச்சின்ன கிராமங்களின் குடிகளைப் பார்த்து, அங்கு ஒரு கிணறு தோண்ட எண்ணம் தோன்றியது. தண்ணீர்ப் பந்தல் போடவும் விரும்பினார். அவர் தனது கருத்தை கிராமத்துப் பெரியவர்களிடம் தெரிவித்தார். அனைவரையும் அழைத்து சம்மதத்தையும் பெற்றார். ஆனால் அதில் ஒரு கிழவன் சொன்னான், "இவ்வளவு பெரிய கிராமம்... கிராமமும் வறுமையில் இல்லை, நஞ்சை புஞ்சை இரு போகங்களும் நடைபெறுகின்றன! வேறு

எந்தத் தரர்மிகக் காரியத்திற்கும் அவசியம் இல்லை. ''கிணறு தோண்ட வேண்டும், என்பது தற்போது மிகத் தேவை! ஆனால் ஒன்று! இதை உன் கைகளால்தான் செய்கிறாய் என்பதால் கிராமத்தில் இருந்து எந்த உதவியும் கிடைக்காது''. கிழவனின் வார்த்தையை எல்லோரும் ஆலோசித்தனர். சாதீராம் ஏதோ சொல்ல முன் வந்தார். அதற்குள் கிழவன் இடைமறித்தான், ''சேட்சாஹுப்! கிணறு கிராம மக்க ளுக்குத்தான்! கிராமத்தாருக்கு கோசேவையில் பூரண ஈடுபாடு தோன்றியிருக்கிறது. சென்ற வருடத்தில் என்ன நடந்தது தெரியுமா? லால்கானின் கமலைக் கிணற்றில் ('கோல்') பசுக்கள் ஒருநாள் தண்ணீர் குடித்தன. அன்றையில் இருந்து தொடர்ந்து பருகி வந்தன. லால்கானின் ஆட்களின் கண்களில் இது பட்டுவிட்டது. தண்ணீர் குடித்துக் கொண்டிருக்கும் பசுக்களை விரட்டியடித்தனர். பசுக்களும் இரு மைல் கல் தொலைவிற்குச் சென்று நீர் பருகி வந்தன. இடையர்களும் வெகுதூரத்திற்கு பசுக்களை மேய்த்துச் சென்று தண்ணீர் காட்டி வந்தனர். ஒருநாள் ஒரு இடையன் மிகவும் கெஞ்சினான். அன்றொரு நாள் மட்டும் தண்ணீர் குடிக்க தம் பசுக்களை அனுமதிக்கு மாறு மன்றாடினான். தண்ணீர் பருகி மூன்று நாட்கள் ஆகின்றன என்று தன் துயரக்கதையை விரித்துரைத் தான். அக்கம்பக்கத்தில் குடிப்பதற்கு ஏற்றாற்போல், தாகத்தைத் தீர்க்கும் தண்ணீர் எங்கும் இல்லை என்பதையும் சுட்டிக் காட்டினான். ''தயவு செய்து இன்றொரு நாளுக்கு மட்டும் அனுமதி வழங்குங்கள்'' என்று மிகவும் கெஞ்சினான். ஆனல் அவர்களின் இதயம் இணங்க வில்லை. முதலில் இல்லை என்று சொல்லி பின்பு 'ஆம்' என்று சொல்லும் வழக்கமும்

அவர்களிடம் அறவே இல்லை. மிக மிகத் தாழ்மையாகக் கேட்டுக் கொண்ட பிறகும் அவர்களது விடாப்பிடியில் எந்தவித மாற்றமும் ஏற்படவில்லை. அப்போது தாகத்தால் துடிதுடித்துக் கொண்டிருந்த பசுக்களின் வாடிய முகங்களைப் பார்த்து இடையன் துவண்டான். 6 மைல்கள் தொலைவிற்கு அப்பசுவை அழைத்துச் சென்று நீர் காட்டினான். அந்த கிராமத்துத் தண்ணீர் பசுக்கள் வந்து, நீர் பருகுவதற்கு முன்னால் உண்மையிலேயே மிகவும் கெட்டுத்தான் போயிருந்தது.

இதனால் இப்போது அது 'பால்' போல் மாறிவிட்டது. ஆனால் அதிர்ஷ்டம் இல்லாத லால்கானின் கமலைக் கிணறு கைகூட வைக்க முடியாத அளவிற்கு கெட்டுப்போய் விட்டது.



# காப்பாற்றல்

சேட் சாதிராம்ஜி பச்சீஸியாவிடம் ஒரு வேலைக்காரன் இருந்தான். அவன் பெயர் ஸான்வல். அவன் அடிக்கடி ஒரு நிகழ்ச்சியை சொல்லுவது வழக்கம். அவனது மூதாதையர் ஜோத்பூர் சமஸ்தானத்தில் இருந்து நோஹர் (பீகாநேர்) நிலவரி வசூல் செய்யும் விடவராணா கிராமத்தில் தங்கி விட்டார். ஒரு நாள் உழவு செய்கின்றபோது ஒரு காயமுற்ற பசுவை வழியில் பார்த்தார். காலில் பயங்கரமாக அடிபட்டிருந்ததால் அந்தப் பசுவால் நடக்கக்கூட முடியவில்லை! ஸான்வாலாவின் மூதாதையர் அப்பசுவிற்கு முதலுதவி செய்ய தீர்மானித்தார்.

இரண்டு மூன்று நாட்களாக பசி தாகத்தால் பசு வாடியிருப்பதை உணர்ந்து கொண்டார். உடனே

ஒட்டகத்தின் மூலம் கிராமத்திலிருந்து 'தண்ணீர்' கொண்டு வந்து சேர்த்தார். கையோடு கொஞ்சம் தீவனமும் கொண்டு வந்திருந்தார். இரண்டு பானைத் தண்ணீரை பசு சாப்பிட்டது. தீவனமும் சாப்பிட்டது. நிலத்திலிருந்து இரண்டொரு கட்டு புல்லையும் போட்டார்; சாப்பிட்டது. இப்படி தொடர்ந்து நடை பெற்று வந்தது. பசுவிற்கு தெம்பு வந்து காயம் குணமாகி இன்னொரு இடத்திற்கு செல்லும்வரை இச் செயல்கள் நடந்த வண்ணம் இருந்தன.

ஸான்வாலாவின் முப்பாட்டனார் கிணறு வெட்டு வதில் நிபுணர். விடவாரண்யத்திலேயே கிணறு தோண்டி வந்தார்! பீகானேர் கிணற்றில் 60-70 முழத்துக்கு அடியிலே நீரூற்று இருந்தது. மணற்பாங் கான இடத்தில் கிணறு தோண்டுவது பாம்பின் வாயில் கையைவிடுவது போல அல்லவா? ஏனென்றால் கிணறு தோண்டுகையில் மேலேயிருந்து ஏதேனும் இடிந்து விழுமோ என்ற சந்தேகம் இருந்து வந்தது. இடிந்தும் வீழ்ந்தது; அதுவும் எப்போது தெரியுமா? ஊற்றுநீர் சுரக்கின்ற நேரம்.

ஸான்வாலாவின் முப்பாட்டனார் வயதானவர். அவர் மிகவும் ஏழை என்பது ஊரறிந்த விஷயம். அப்படிப்பட்டவர் ஒருவர் இறந்து போனார் என்ப தால் யார் கவலைப்பட போகிறார்? "அவர் இறந்து போய்விட்டார்" என்று ஊரார், வீட்டாருக்கு ஆறுதல் கூறினர். விழுந்து இறந்த இடம் இப்போது மண்மே டிட்டுப் போய்விட்டது. அவரது புதைந்த சடலத்தை தேடிக் கண்டுபிடிக்க முற்பட்டால் இன்னும் பலர் இறப்பார்கள். ஏனென்றால் பூமி எல்லா பக்கங்களி லும் மிகவும் வறண்டு போய் இடிந்து விழும் போல் இருந்தது. எனவே கிணறு தோண்டும் விபத்தில் அவர் இறந்து விட்டார் என்று எண்ணி ஆறுதல் அடைவ தைத் தவிர, யாரால்தான் என்ன செய்ய முடியும்?

ஸான்வாலாவின் முப்பாட்டனார் ஏழை கிராமத்தாரின் வேலைகளில் பங்கெடுத்து வந்தார். எனவே ஸான்வாலாவின் முப்பாட்டனார் பூதமாகத் திரியக்கூடாது என்பதற்காக கிராமத்தார்கள் ஒன்று சேர்ந்து, அவரது 12-வது நாள் நல்விருந்து படைக்கத் தீர்மானித்தனர்.

கிணற்றிலிருந்து, நல்விருந்திற்காக புனித நீர் இரைக்க முற்பட்டனர். இராட்டினத்தின் கயிற்றால் வாளி இறக்கப்பட்டது. 20-25 அடி தூரத்தில்தான் தண்ணீர் இருந்தது. ஆனால் வாளி சிக்கிக் கொண்டது. எட்டிப் பார்த்ததில் காளி போன்ற ஓர் உருவம் அதைப்பிடித்துக் கொண்டு இருந்தது. யார் என்று கேட்டபோது ''ஸான்வாலாவின் கொள்ளுத்தாத்தாவின் அப்பா'' என்றது. பிறகு என்ன?.... அவ்வளவு தான், சூராதி சூரர்கள் வாளியையும் கயிற்றையும் விட்டு விட்டு தலைதெறிக்க ஓடினார்கள். ஊராரிடம் ஸான்வாலாவின் தாத்தாவின் ஆவி கிணற்றில் இருப்பதைச் சொல்ல ஆரம்பித்தார்கள். செவிக்கு செவி விஷயம் தாவும்போது, கை வைத்து கால் வைத்து விசுவாகாரமாக உருவானது. ஊரே அல்லோல கல்லோலப்பட்டது. அகால மரணம் அடைந்ததால் அவர் பேயாகத்தான் ஆகியிருப்பார் என்று முடிவும் எடுக்கப்பட்டது.

கிராமத்தில் சில தைரியசாலிகளும் இருந்தனர். கிணற்றில் இருப்பது என்ன என்று பார்த்து வருவதாகக் கிளம்பினார்கள். அங்கு சென்று என்ன செய்வதென்பதும் தீர்மானிக்கப்பட்டது. இரண்டு தைரியசாலிகள் கம்பும் கழியுமாக கிணற்றில் இறங்கினர். சிறிது தொலைவு இறங்கும்போதே அவ்வுருவத்திடம் ''பேயாக எப்படி ஆனீர்?'' என்று கேள்வியைக்

கேட்கத் தொடங்கினர். ''உங்களை எப்படி விடுவிப்பது?'' என்ற உபாயத்தையும் வினவத் தொடங்கினர். உடன் பதிலும் வந்தது. ''அட! உன் கண் குருடா? நான் என்ன பேயா? நான் தான் ஸான்வாலாவின் கொள்ளுத்தாத்தாவின் அப்பா! உனக்கு என்னைத் தெரியவில்லையோ? பேய் இப்படியா இருக்கும்?'' விஷயம் சரியாக எல்லோருக்கும் புரியத் தொடங்கியது. கம்பளியினால் சுற்றி அவரை அப்படியே வெளியே கொண்டு வந்தனர். மறுநாள் தன் உயிர் மீண்ட கதையை அவர் சொல்லலானார்.

''நீங்கள் எல்லோரும் நான் இறந்து விட்டேன் என்றுதான் நினைத்திருக்கிறீர்கள். ஆனால் கோமாதாவின் கருணையினால் உயிர் தப்பி இருக்கிறேன்''.

கிணற்றின் இடிந்து விழுந்த கல் என்னைக் கீழே தள்ளிவிட்டது. இடிந்து வீழ்ந்த கல்மண் இரண்டடி உயரம் இருந்தது. ஒரு ஓரமாக நின்று இருந்தேன். மிகவும் பயந்து கொண்டே இருந்தேன். ''அப்படி பயந்தவாறு இருந்ததைவிட இறப்பதே மேல்'' என நினைத்தேன். எல்லாம் விதியின் விளையாட்டு! எனக்குப் பசியான பசி. என்ன செய்வதென்று தெரியாமல் விழித்து நின்றேன். அப்போது. அதே பசு... என் முன் நின்று, தன் முளைக்காம்பை என் வாயில் திணித்தது. என் தாயின் மடியில் அமர்ந்து தாய்ப்பாலுண்ட நினைவு வந்தது. என் திகைப்பிற்கு அளவில்லாமல் இருந்தது. பயங்கரமான பசி... வயிறாறப் பால் குடித்தேன். அப்பசு பிறகு தன் கொம்பினால் இடிந்து விழுந்த சுவரின் ஒரு திசையை நோக்கி சைகை காட்டியது. ஆனால் என்னால் ஒன்றும் புரிந்துக் கொள்ள முடியவில்லை! எழுந்து நின்று பார்த்தேன். 'முள்ளம்பன்றியின் முட்புதர் ஒன்றைத்

தான் சுட்டிக் காட்டிக் கொண்டிருக்கிறது' என்பதையும் புரிந்துக் கொண்டேன்! அந்தப் புதர் கிணற்றிலிருந்த குமுதமலர்த்தோட்டம் வரை பாலமாக இருந்தது. சில்லென்று காற்று வீசத் தொடங்கியது. கிணறு தோண்டத் தேவையான அனைத்து பொருட்களும் அங்கிருந்தன. நான் தோண்ட ஆரம்பித்தேன். பசியெடுத்த போதெல்லாம் பால்மழை பெய்ய பசு வந்தது. களைத்துப் போனால் தூங்கிவிடுவேன். 'இரவா? பகலா' என்பது தெரியாமலே இருந்தது. இப்போது அக் கோமாதாவின் கருணையினால்தான் உங்கள் முன் நின்று நான் பேசிக் கொண்டு இருக்கிறேன். இதுதான் என் புது வாழ்க்கையின் முன்னுரை! எனக்கு கிடைத்த 'புனர் ஜென்மம்'.

இம்மூன்று சம்பவங்களும், வயதான சேட் சாதீராம்ஜி என்னிடம் கூறியவை. 'உண்மையா?' என நான் ஆராய முற்பட்டேன்! அனைத்துமே மெய் யென்று பல சான்றுகள் கிடைத்தன.



# கோசேவையால் நேரடிப் பலன்

**(எழுதியவர்: ஸ்வாமிஜி ஸ்ரீ பூமாநந்தஜி)**

வெகுநாள் முன் நடந்த நிகழ்ச்சி. ஓர் அந்தணப் பெரியவரின் வீட்டிற்கு சன்யாஸி ஒருவர் விருந்தின ராக வருகை தந்தார். அக்குடும்பத்தில்-இருவர்தான் கணவன்-மனைவி. குடும்பத்தில் பொருளாதார ரீதி யாக எந்தக் குறையும் இல்லை! இருவரும் அறநூல் கூறும் வழியில் வாழ்க்கையை நடத்தி வந்தனர். குழந்தைகள் இல்லாத காரணத்தால், எப்போதாவது

கவலை தோன்றிக் கொண்டேயிருந்தது. அந்தண தம்பதியர் விருந்துபசரித்து சன்யாசியை வீட்டிலேயே தங்க வைத்தனர்; தம்மால் முடிந்தவரை பணிவிடை செய்து வந்தனர். அந்நாட்களில் சாது சன்யாசிகளிடம் பொது ஜனங்களுக்குப் பெருத்த மதிப்பு இருந்து வந்தது; நம்பிக்கை வைத்தனர்; பக்தி பாசத்தோடு போற்றிவந்தனர். அதற்கு ஏற்றாற்போல் சாது சன்யாசி களும் தூயப் பழக்க வழக்கத்தினராக பேச்சு வார்த்தைகளால், நடைமுறைப் பழக்க வழக்கங்களால் ஞானம் மிக்கவராகத் திகழ்ந்தனர்.

சாப்பிட்டு முடித்தவுடன், ஓய்வு எடுக்கின்ற போது சன்யாசியிடம் பல விஷயங்களைப் பற்றிப் பேசினர். கிராமத்தில் உள்ள மற்றவர்களும் சாதுவை தரிசிப்பதற்காக வரலாயினர். பேச்சுவார்த்தையின் தொடர்பாக, அந்தணர் இல்லாதபோது ஒருவன் சொன்னான் "கிராமத்தில் இந்த அந்தண தம்பதிய ரைப் போல, உண்மை விளம்பி, பணிவு மிக்கவர், தரும நெறியாளர், விருந்தாளிகளை நன்றாக உபசரிப் பவர், நல்லவர், தேடிப்பார்த்தால்கூட எங்கும் தென் பட மாட்டார். ஆனால் இவர்களுக்குக் குழந்தை பிறக்கவில்லை! அறநெறியாளர்களாக விளங்கும் இவர்களின் வேண்டுதலுக்கு, இறைவனும் ஏன் மனமிரங்கவில்லை என்பது யாருக்கும் தெரிய வில்லை! இறைவன் எக் காரணத்தால் இவர்களின் நற்செயல்களில் தன் அதிருப்தியை வெளிப்படுத்துகி றான்?" சன்யாசியும் உண்மையை உணர்ந்தார். ஒவ்வொருவரும் ஒருவர் பின் ஒருவராக தன் இருப்பிடத்திற்குச் சென்றனர். சாது, அந்தணர் வீட்டி லேயே தங்கினார்.

மறுநாள் காலை சாது வேறு எங்கோ செல்ல விருப்பம் தெரிவித்தார். ''இல்லறம் பேணி வரும் வீட்டில் பொன்னடி சாற்றி உணவு உண்ணாமல் செல்லலாமா? மதிய உணவை உண்டு, ஓய்வு எடுத்துக் கொண்டு எங்கு செல்ல விருப்பமோ, அங்கு செல்லுங்கள்'' என்று அந்தணர் கூறினார். சன்யாசியும் ஏற்றுக் கொண்டார். அந்தண தம்பதியர் சந்தோஷமடைந்து வணங்கினர். ''விரைவிலேயே புத்திரபாக்கியம் உண்டாகட்டும்'' சாது ஆசி வழங்கினார். அந்தணர் சற்று வியப்படைந்து ஆசியின் காரணத்தைக் கேட்டார். சாது கூறினார். ''வீட்டிற்கு வந்த விருந்தாளிகளை முகம் சுளியாது உபசரிப்பதால், ஸ்ரீமந் நாராயணன் தன்னை உபசரிப்பதாக எண்ணி மிகவும் மகிழ்வடைகிறான்! இத்தனை நாட்கள் பேணிவந்த விருந்தோம்பலினால் உளம் மகிழ்ந்து, என்னை ஒரு மார்க்கமாக வைத்து இவ்வாசியை உங்களுக்கு வழங்கி இருக்கிறான். இந்த ஆசியில் எந்த விதமான சந்தேகமோ அவ நம்பிக்கையோ உங்களுக்கு ஏற்படவே தேவையில்லை''.

அந்தண தம்பதியர் கைகூப்பிவாறு கேட்டனர், ''ஐயா! இப்போது நாங்கள் மேற்கொள்ளவேண்டிய பூஜை ஏதேனும் உண்டா?'' பதில் கூறினார் ''கோ-பூஜை'' சாது விடைபெற்றார். அந்தணத் தம்பதியர் கருவுற்றிருந்த பசு ஒன்றை விலைக்கு வாங்கி சேவை செய்யத் தொடங்கினர். காலங்காலையில் அதனைக் குளிப்பாட்டுவர்! புத்தம் புது புல்லைக் கொண்டுவந்து போடுவர். நன்றாக சமைக்கப்பட்ட சாதம், பலவிதமான உணவு தானியங்களைக் கொண்டு பசுவைத் திருப்தி செய்ய முயற்சித்தனர். இவ்விதமாக கோ-சேவை செய்து தம் வாழ்நாட்களைக் கழித்து வந்தனர். பசுவின் கால்களை நன்னீராட்டி பூசைசெய்து தன்

கேசத்தினால் அதன் பாதங்களை மனைவி ஒத்திவிடு வாள். பிறகு அந்நீரை கண்களில் ஒற்றிக் கொண்டு ஸ்ரீபாத தீர்த்தமாக பருகினாள். அந்தி வேளையில் தொழுவத்தில் விளக்கேற்றி வைப்பாள். பிறகு அப்பசு விற்காக பசும்புல்லினால் மெத்தை தயாரிப்பாள். விடியற்காலையில் எழுந்துக் கொண்டு தொழுவத்தை சுத்தம் செய்வாள். இப்படிப்பட்ட சேவையினால் பசுவும் கன்றும் புஷ்டியாக இருந்தன. சிறிது தினங்களுக்கெல்லாம் அந்தணப் பெண்மணி கருவுற் றாள்; அந்தணத் தம்பதியர் அடைந்த ஆனந்தத்திற்கு அளவேயில்லை. அவர்களுக்கு ஓர் ஆண் மகன் பிறந்தான். அந்த கிராமம் முழுவதும் மகிழ்ச்சி தாண்டவமாடியது. அப்போது அவர்களுக்கு அச்சாது வின் நினைவு வந்தது. இதன் விளைவால் பலர் கோ-மாதா சேவையில் ஈடுபட்டனர்.

என் குழந்தைப் பருவத்தில் இந்நிகழ்ச்சியைப் பலமுறை நான் கேள்விப்பட்டிருக்கிறேன். கல்லூரி யில், கவிச்சக்கரவர்த்தி காளிதாசனின் 'இரகுவம்சம்' பாடமாகப் படிக்கும் பாக்கியம் பெற்றேன். இரகுவம் சத்து மகராஜா திலீபனுக்குப் புத்திர பாக்கியமே இல்லாத போது, குலகுரு வசிஷ்டர் கோமாதாவிற்கு சேவை செய்ய உபதேசித்தார்.

**காமதேனுவின் பிள்ளையைத் தினம்**
**பூசை செய்திடு பெண்டு தன்னொடு!**
**மூனுமாசைகள் முற்றிலும் பெற**
**ஆசி கூறுவாள்! அன்பிலோங்குவாய்!**

**(இரகுவம்சம்-1/83)**

திலீபனும், அதற்குப் பிறகு, சுதக்ஷிணாவோடு பக்திபொங்க, வசிஷ்டரால் உபதேசிக்கப்பட்ட விரதத் தைப் பேணினான். உடல்-பொருள்-ஆவி உள்ளத் தால் அதன் சேவையில் ஈடுபட்டாள். அதனைக்

காப்பாற்றும் நோக்கத்தில், அதனோடு காடு, மேடு, மலை மற்றும் நதிக்கரைக்கெல்லாம் பயணம் மேற் கொண்டான். அதற்குப் பிறகு மாயச் சிங்கம் பசுவின் மீது பாய்ந்ததும் அதற்காகத் தன் உயிர் துறக்க திலீபன் முற்பட்டான். இது யாவரும் அறிந்ததே, ராஜா திலீபனின் உளமார்ந்த சேவையை சோதித்துப் பார்த்து நந்தினிப்பசு அவர்களுக்கு ஆசி வழங்கியது. அதன் பலனாக சுதக்ஷிணையின் மணிவயிற்றில் இருந்து 'குலவிளக்கு' ரகு பிறந்தான். ''இந்திராணிக்கு நிக ரான சுதக்ஷிணா ராணி இரகுவைப் பெற்றெடுத்தாள்''. இப்போதுகூட இக்காவியத்தைப் படிக்கும்போது, என் கண் முன் குழந்தைப் பருவத்தில் கேட்ட நிகழ்ச்சி ஞாபகத்திற்கு வருகிறது. மேலும், கோசேவையில் எனக்கு ஈடுபாடும், திட நம்பிக்கையும் இன்னும் தீவிரமாகியுள்ளன. கோ-மாதா சேவையின் மகி மையை நன்றாகப் புரிந்து கொண்டேன்.

என் வயோதிகப் பருவத்தில் இல்லற தர்மம் பேணும், என் சீடன் ஒருவனுக்கு கோசேவையின் மகிமையை உபதேசித்தேன். எப்படிச் சேவை மேற் கொள்ளவேண்டும் என்பதையும் கூறினேன். அவனது மனைவி கருவுற்றதாகக் கேள்விப்பட்டேன். ''காளிதா சனின் கவிவாக்கு வரலாற்று நிகழ்ச்சி, கேள்விப்பட்ட சேதி... கற்பனையல்ல.... நடக்கக்கூடியது என்பதை உணர்ந்தேன்''. இறைவன் அருளினால் தக்க நேரத்தில் புத்திரபாக்கியம் அவர்களுக்கும் ஏற்படும் என்பதை ஆத்மார்த்மாக உணர்ந்தேன்; ஆனந்தம் அடைந்தேன். பசு-சேவையின் மகிமை பழங்காலத்தில் மட்டும் என்று இல்லை, இப்போதும் உண்டு, இனிவரும் காலங்களிலும் இது உண்டு என்பதைத் தெரிந்துக் கொண்டேன். கோ-மாதா சேவையில் எனக்கு அசைக் கமுடியாத நம்பிக்கை ஏற்பட்டது.

கோ-மாதா சேவையின் மகிமையை சொல்லிக் கொண்டே இருந்தாலும் நிறைவுறாது. மனமார கோசேவை செய்ததால்தான் ஆயர்பாடி ஆயர்களுக்கு பகவான் ஸ்ரீகோவிந்தனையே பெறும் பாக்கியம் கிடைத்தது என்று நான் மனப்பூர்வமாக நம்புகிறேன்.

**''கோவிந்தனின் தாள்பணிந்தோம்**
**கோபாலனின் அருள்பெறுவோம்''.**



# பசுவின் மதிப்பீடு

## (சிறுகதை)

பழங்காலத்தில் நடந்த நிகழ்ச்சி. சியவன மகரிஷி பிருகு மகரிஷியின் திருக்குமாரர். ஒருமுறை பெரும் விரதத்தை மேற்கொண்டு நீருக்கு அடியில் தியானம் செய்யத் தீர்மானித்தார். செருக்கு, கோபம், ஆனந்தம், இன்பதுன்பம் முதலியவற்றைத் துறந்து, 12 வருடங்கள் நீரின் அடியில் சமாதி நிலையில் இருந்தார். மகாத்மாவின் இச் சுபாவத்தையும் தவநெறியையும் கண்டு, அனைத்து நீருயிர்களும் அவரது தோழர்களாயின. மீன்போன்ற நீருயிர்களுக்கும்கூட அவரிடம் சிறிதும் பயமே இல்லாமல் போனது. ஒருமுறை மகரிஷி சியவனர் மிகவும் சிரத்தையோடு தலைபணிந்து கங்கை யமுனை சங்கமத்தின் உள்ளே பிரவேசித்தார். சில நேரங்களில் ஜலசமாதியில் இருப்பார். சில நேரங்களில் அசைவற்று நீரின்மேல் அமர்ந்திருப்பார். இப்படி விரத அனுஷ்டானங்கள் செய்து நாட்கள் கடந்துவிட்டன. ஒருநாள் ஒரு மீனவன் கங்கையில் வலையிட்டான். ஜலசமாதியில் கண்பணித்து இருந்த சியவன மகரிஷி வலையில்

சிக்கிக் கொண்டார். வழக்கத்திற்கு மாறாக பெரிய நீர்ப்பிராணியைப் பிடித்த களிப்பில் அருகிலிருந்த மீனவர்கள் எல்லாரும் ஒன்று சேர்ந்து வலையை மேலே இழுத்தார்கள். மகரிஷி சியவனரும் வலையி னுள்ளே சிக்கியவாறு வெளியே வந்தார். அனைவரும் அவரைக் கண்டு திகைத்தனர்.

வலையில் சியவன மகரிஷியைப் பார்த்து செம்படவர்கள் நடுங்கினார்கள். கைகளைக் குவித்து மன்னிப்புக் கேட்டனர். நீரிலிருந்து வெளிவந்ததால் மீன்கள் துடிதுடித்து இறந்து கொண்டு இருந்தன. இதைக் கண்டதும் மகரிஷி மிகவும் மனம் வெதும்பி னார். செம்படவர்களிடம் கூறினார் ''இந்த மீன்க ளோடு என் உயிரை நான் தியாகம் செய்ய விரும்புகிறேன். இவைகள் என்னுடன் பழகியவை. பல நாட்களாக நானும் இவ்வுயிரினங்களோடு காலத் தைக் கடத்தி இருக்கிறேன். எனவே இவைகளைவிட்டு உயிர்வாழ நான் விரும்பவில்லை. என்னுடன் பழகிய வர் உயிரற்று இருக்கையில் நான் மட்டும் உயிருடன் இருந்து என்ன புண்ணியம்? நானும் இப்போதே என் உயிரைத் தியாகம் செய்கிறேன்''.

மகரிஷியின் வார்த்தையைக் கேட்டு, செம்படவர் களின் கைகால்கள் நடுங்கத் தொடங்கின. ஏனென்றால் மகரிஷி சியவனரின் உயிர் துறப்பதற்கு அவர்கள் காரணமாகி விட்டார்கள். அவரை அப்படியே விட்டு விட்டு, பயந்த மீனவர்கள் பதைபதைத்து இராஜா நகுஷனிடம் சென்றனர். நடந்த அனைத்தையும் கூறினர். நடந்ததைக் கேள்வியுற்ற அரசர், வருத்தம டைந்தார். தம்மைப் பெருமைப்படுத்துவதற்காக சிய வன மகரிஷி வந்திருப்பதாக உணர்ந்தார். இறையருள் என்று நினைத்து, மந்திரிமார் சாத்திரமார் சூழ

செம்படவரோடு, கங்கைக் கரைக்கு வந்தார். மிக்க தாழ்மையுடன் கைகளைக் கூப்பி, நெறிப்படி அவரை பூசித்தார். "பிரபோ! கட்டளையை நிறைவேற்றத் தொண்டன் வந்திருக்கிறேன். எனக்கு ஆசி அளித்து அனுக்கிரகிக்க வேண்டும்!"

மகரிஷி கூறலானார், "அரசே! இந்த செம்படவர்கள் மிகவும் முயற்சித்து, மீன்களோடு வலையிலே சிக்கிய என்னையும் சேர்த்து, கரைக்கு கொண்டு வந்திருக்கின்றனர். ஆனால் வலைக்குள் இருந்தது நான் என்பதை அறிந்து மிகவும் திடுக்கிட்டுவிட்டார்கள். இவர்களுக்கு என்னால் எதிர்ப்பார்த்த அளவிற்கு மீன்களும் கிடைக்கவில்லை. இவர்கள் இன்று வயிற்றுப் பிரச்சினையை எப்படி சமாளிப்பார்கள்? எனவே, எனக்குரிய விலையை இவர்களிடம் கொடுத்துவிடுவியுங்கள். அப்போதுதான் இன்றைக்கு இவர்கள் வீட்டில் உலை பொங்கும்".

அப்போது அரசர் நகுஷன் புரோகிதரிடம் நவின்றார், "புரோகிதரே! இச்செம்படவர்களுக்கு மகரிஷியின் மதிப்பிற்குத் தக்கப்படி ஓராயிரம் பொற்காசுகள் கொடுங்கள்". இதைக் கேட்டு சியவன மகரிஷி கூறினார், "அரசே! என் மதிப்பு ஓராயிரம் பொற்காசுகள்தானா? இத்தனை பொற்காசுகளில் விலை பேசப்படக் கூடியவனா நான்? தாங்கள் சற்று நன்றாக சிந்தித்து என்னை மதிப்பிடுங்கள்."

ராஜா—

"முனிபுங்கவரே! இச்செம்படவர்களுக்கு ஒரு லட்சம் பொற்காசுகள் கொடுத்துவிடுகிறேன்". சொல்லுங்கள் இம்மதிப்பீடு சரியா?

சியவனர்—

''அரசே! ஒரு லட்சம் என்று கணக்கிட்டும் என்னை குறைத்து மதிப்பிடுகிறீரே! தங்கள் மந்திரியார் மற்றும் புரோகிதருடன் கலந்து ஆலோசித்து நிகரான விலைகொடுத்து வாங்குங் கள்''.

இதைக் கேட்ட அரசர் மந்திரியார்-புரோகிதருடன் கலந்து ஆலோசிக்காமல் ஒருகோடி பொற்காசுகள் தருவதற்கு முற்பட்டார். மகரிஷி மறுபடியும் அவனைத் தடுத்தார். தனது பாதி ராஜ்ஜியத்தைத் தருவதற்குத் தயாரானார் அரசர்.

சியவனர்—

''வேந்தே! தங்களது பாதியென்ன முழு ராஜ்ஜி யமே என் முழு மதிப்புக்கு ஒப்பாகாது! உங்களுக்கு என்னை மதிப்பிடுவதில் சிரமம் இருந்தால் முனிவர்கள்-அந்தணர்களை கலந்து ஆலோசியுங்கள்''.

இதைக்கேட்டு, ராஜா நகுஷன் மிகவும் வருத்தம டைந்தார். அவருக்கு ஒன்றும் புலப்பட வில்லை விடைபெற்றுச் சென்றார். தன் மந்திரியார் மற்றும் புரோகிதரிடம் இதுபற்றி கலந்து பேசினார்.

இதே நேரத்தில், கனி கிழங்குகளை உண்டு வாழும் காட்டிலே வசிக்கும் இன்னொரு முனிவர் நகுஷனின் அருகில் வந்தார்.

பசு இனத்தில் பிறந்த அந்த முனிவர் கூறினார்—

''அரசே! நீங்கள் வருத்தப்பட வேண்டாம்! இந்த மகரிஷி மனம் குளிரும்படியான மதிப்பைச் சொல்கிறேன். நான் சொல்வதைச் சற்று உன்னிப்

பாகக் கேளுங்கள். வேடிக்கையாகக் கூட நான் பொய் பேசியது இல்லை. எப்போதும் நான் உண்மைதான் பேசுவேன். எனவே என் வார்த்தை களில் தங்களுக்குச் சந்தேகம் வேண்டாம்.

நகுஷ ராஜா சொன்னார்—''பிரபோ! நான் ஒரு பெரும் சங்கடத்தில் சிக்கித் தவிக்கிறேன். என் காரணமாக ஒரு முனிவர் இப்போது தன் உயிரை நீக்கத் துணிந்திருக்கிறார். அதற்கு இணையான மதிப்பை நீங்கள் கூறினால், நான் தன்யனாவேன். இந்த பயங்கரக் கஷ்டத்தில் இருந்து என்னையும், என் குலத்தையும், என் ராஜ்ஜியத்தையும் அப்போது தான் என்னால் காப்பாற்ற முடியும்; அந்தப் பெருமை யும் தங்களைத்தான் வந்தடையும்''. ''அரசே! பிராம ணரும் பசுக்களும் ஒரே குலத்தை சேர்ந்த படைப்பு கள். ஆனால் உலகியல் போக்கில் இரு பிரிவுகளாகப் பிரிந்திருக்கின்றனர். பிராமணர்கள் மந்திர வடிவம், பசுக்கள் அவிசு(தெய்வ உணவு) சொரூபம்! பிராம ணர்களையும் பசுக்களையும் யாராலும் சரியாக மதிப்பிட முடியாது. எனவே இவரது மதிப்பிற்கு இணையாக ஒரு பசுவை கொடுத்து விடுங்கள்.

**முனிவர் மொழிந்தார்:**

**அந்தணர், ஆநிரை ஓர் குலமாகுமாம்
மந்திர மவிசெனு மிரு பிரிவானதே!
அந்தணர் உத்தமர், இரண்டிற்கு மெது நிகர்?
சிம்மமே! முனிநிகர் சீர்பசு ஈகுவாய்!**

**(மகாபாரதம்-ஆனுசாஸிக பர்வம்-51/22)**

முனிவரின் இவ்வார்த்தைகளைக் கேட்டு, ராஜா நகுஷனும் புரோகிதர்களும் மிகவும் சந்தோஷமடைந் தனர்! உடனே முனிவரிடம் சென்று ராஜா கூறினான்,

''உத்தம அந்தணரே! நான் ஒரு பசுவை மதிப்பாகக் கொடுத்து தங்களை வாங்கிவிட்டேன். தங்களுக்கு இணையான மதிப்பாக இதை நான் கருதுகிறேன்''. ராஜாவின் இவ்வார்த்தைகளைக் கேட்டு முனிவர் கூறினார். ''அரசே! இணையான மதிப்பைக் கொடுத்து என்னைச் சரியான விலைக்கு வாங்கி விட்டீர்கள். உண்மையாகவே பசுக்களுக்கு இணையாக எந்த செல்வமும் இவ்வுலகில் ஏதும் இல்லை! பசுக்களின் அருமை பெருமைகளை போற்றுதல், போற்றுதலைக் கேட்டல், பசுக்களைத் தானமாக கொடுத்தல், அவை களை தரிசித்தல் போன்றவை சாத்திரங்களில் போற்றத் தகு நற்செயல்களாக கூறப்பட்டுள்ளன!

இவ்வனைத்துப் பாவச் செயல்களையும் போக்கி, மங்கலமான பலன்களைக் கொடுக்கும் பசு நடமாடும் திருமகள்! பாவம் என்பது அணுவளவும் கூட இதனால் தங்களை அணுகாது. பசுதான் மனிதர்க ளுக்கு அன்னத்தையும், தேவர்களுக்கு அவிசையும் அளிக்கிறது. வேள்வியின் விரைகமழ் நறும்புகைக்கும் ஆகுதிக்கும் பசுவே காரணம். வேள்வியை நடத்துவ தும், முதற் காரணமாக இருப்பதும் பசுதான்! எந்த மாற்றமும் இல்லாத அமுதத்தை ஏந்தி பசு இப்பூமியில் நமக்காக வந்திருக்கிறது. பால் கறக்கையில், அமு தத்தை அள்ளி அளிக்கிறது. பால் ஏற்கப் பிடித்த கலன்கள் எதிர் பொங்கி மீதளிக்கின்றன. அமுதத்தின் ஊற்றுக்கண் இது. அனைத்து உலகமும் இதன்முன் மண்டியிருக்கிறது. பசு இனம் எங்கு எல்லாம் அமர்ந்து, பயமின்றி சுவாசிக்கிறதோ அங்கெல்லாம் ஆனந்த அலை தாண்டவமாடும்! அழகு கூடும்! அங்கு நிரவியிருக்கும் பாவமெல்லாம் தாமாக ஓடிவி டும்! பசுக்கள் விண்ணுலகத்தின் படிக்கட்டுக்கள்!

சொர்க்கத்திலும் பூசிக்கப்படும் பெருமை மிக்க பிராணியும் பசுதான்! அனைத்து வேண்டுதலையும் நிறைவேற்றும் தேவியம் இதுதான்! பசுவை விடச் சிறந்ததும் ஏதும் இல்லை! யாராலும் இதன் பெருமையை வெறும் வார்த்தைகளால் வருணிக்கவும் முடியாது.

நகுஷன் நவின்றார்—

பிருகுமுனி புதல்வா! பிரமமுனி ஏந்தலே!
தருமநெறி முதல்வா! தூய்பசு ஈந்து,
வழுவிலா உம்மை வாங்கினேன் விலைக்கு!
எழுவீர்! எழுவீர்! உமக்கிது நிகராம்!

முனி மொழிந்தார்—

களங்கமில் கோவே! கடிதிவண் எழுந்தேன்!
கொள்முதல் இணையாய் கொடுத்தெமைப் பெற்றீர்!
கவுரவம் பிறழா காசினி வேந்தே!
கறவைக் கிணையாய் காண்கிலேன் ஒன்றையும்!

'கோ'பெயர்-குணங்கள் கூறல்; கேட்டல்
தானமாய் ஈதல், சாத்திரம் போற்றிடும்!
பார்த்தலே புண்ணியம்; பாவங்கள் போகிடும்!
வீரரே! வளமுடன் வையமும் உய்வுறும்!

ஒருகுறை பசுவிடம் உரைக்குமோ உலகமும்?
பெருகிடும் திருமகள் அருளதன் ஊற்றிது!
வருந்திடும் மனிதற்கு வலுவினை யீந்திடும்!
அருந்தவ அமரர்க்கு அவிசினை யளித்திடும்!

ஆகுதி தன்னொடு அவிசையும் சேர்த்திட,
ஆநிரையினமே அளவிலா துயர்ந்தது!

வேள்வியை இயற்றிட, விழுப்பொருள்
அருளினை
ஏந்தியே நின்றிடும், இது, அதன்
முதற்துணை!

மாற்றமில் அமுதை ஏற்றுருக் கொண்டதே!
நோற்றிடு மன்பினால் நற்பொருள் ஈந்திடும்!
போற்றகு மமுதத்தின் புண்ணிய ஊற்றிதே!
ஏற்றிடும் அகிலமும் இதன்முன் பணிந்தே!

சுதந்திரக் காற்றை சுவாசிக்கும் ஆவினம்,
நிதநிதம் தங்கிடும் நிலமெலாம் கொழிக்கும்!
எழில் மிகக் கூடும்! இன்பங்கள் பெருகும்!
ஒழிந்திடும் குறைகள்! ஓங்கிடும் பொலிவும்!

புண்ணிய புரிக்குப் பசுக்களே படிகள்,
புண்ணிய புரியில் பூசையுமிதற்கே!
எண்ணத்தைக் கூட்டிடும் இன்னருட் தேவி!
இன்னமும் எங்கிலும் இதற்கிணை ஒன்றிலை!

பரதமிம் மண்ணிலே புகழ்ச்சிக்குரியவா!
பசுக்களின் பெருமையைச் சுருக்கமாய்
கூறினேன்
பரவிடும் பெருமைகள் பலபல இருப்பதால்
புகலுதல் புவிதனில் பெரியருக்குமாகுமோ?

*(மகாபாரதம்-ஆனுசாஸிக பர்வம் 51 வது சர்க்கம் 26-30, 32-34 சுலோகங்கள்)*

இவரது வார்த்தைகளைக் கேட்டு, மகரிஷி மவுனமானார். ராஜா கொடுக்கும் பசுவைப் பெற்றுக் கொள்ள மகரிஷியின் சம்மதத்தை எதிர்ப்பார்த்து மீனவர்கள் நின்றனர். மகரிஷி ஏற்றுக்கொண்டார். ''இப்பசுவின் மகிமையால் தங்களின் பாவங்கள்

நீங்கின. இம் மீன்களோடு நீங்களும் சொர்க்கலோ கத்தை விரைவில் அடைவீர்கள்''. இப்படி மகரிஷி சொன்னதுதான் தாமதம். மீனவர்கள் மீன் இனங்க ளோடு சொர்க்க லோகத்திற்கு செல்லலாயினர். இப்படி சொர்க்கலோகத்திற்கு செல்லும் அவர்களைப் பார்த்து நகுஷன் மிகவும் வியந்தார். அப்போது பசு இனத்தில் தோன்றிய சியவன மகரிஷியும் 'ஏதாவது வரம் வேண்டுமானால் கேள்' என்று அரசனிடம் கூறினார். ராஜா அறநெறியில் நிலைத்த மனமும், இறைவனிடம் பக்தியும் என்றும் தனக்கு இருக்க வேண்டினார். 'அப்படியே அருளினோம்' என்று அவர்கள் சொன்னவுடன் அவ்விரு முனிவரையும் முறைப்படி பூசை செய்தார். அதற்குப் பிறகு சியவன மகரிஷி தம் ஆசிரமத்திற்குச் சென்றார். பசு இன முனிவரும் தம் தபோவனக் காட்டிற்குள் பிரவே சித்தார்.



# கோமாதாவும் கோமதிக் கல்வியும்

பாரதத்தில் ஆரம்ப காலத்தில் இருந்தே பசு இனத்தைப் போற்றி வந்திருக்கிறார்கள். பாற்கடலைக் கடையும்போது, அற்புத காமதேனுவும் தோன்றியது. வேதங்களில் பசுவின் அபாரமான பெருமை கூறப்பட் டிருக்கிறது. வேள்விச் செயல்களை நெறிப் படுத்துதல், வேதங்களின் முக்கிய நோக்கமாகும். இதன் ஆதாரத் தில் தான் உலகம் இயங்குகிறது; வளர்ச்சியடைகிறது. இவ்வேள்விக்கான முக்கிய உபகரணங்கள் யாவும் ஆவின் பொருள்களால் ஆனவை. வேள்வித் தீயை வளர்க்க பசுஞ்சாணத்து வரட்டி சிறப்பாகப் பயன்படு

கிறது. புரோடாசம், அவிசு, திரவியப் பொருள்கள் முதலியவற்றில், பஞ்சகவ்யம், நெய், மேலும் இவை கள் இல்லாமல் போனால் கூட பசும்பாலே போதுமான தாக கூறப்பட்டுள்ளது. வேள்வியை முன் நின்று நடத்துவோர் யக்ஞ தீட்சையின்போது பஞ்சகவ்வியத் தினை உண்கின்றனர். 'கவ்யம்' சொல் 'காய்' (பசு)வில் இருந்து பெறப்படும் திரவியத்தைச் சுட்டிக் காட்டுகிறது. பஞ்சகாவ்வியத்தை உண்ணுவதால் ரத் தத்திலும், சதையிலும் தெரிந்தும் தெரியாமலும் கலந்துள்ள பாவங்கள் அனைத்தும் நீங்குகின்றன. இதனால் வேள்வியைத் தொடங்கும் முன் இதை உண்டு பிறகு அனைத்துப் புண்ணிய செயல்களுக்கும் வேள்வி செய்பவர் கண்ணோட்டத்தில், பசு- சாத்விகம், புனிதம், மங்கலம், சக்தி மற்றும் வளமான வாழ்வின் சொரூபமாகக் கருதப்படுகிறது. பயணத்தின் போது மற்றும் விடியற்காலையில் முதன்முதலாக பசுவைப் பார்ப்பது சுபசகுனம்; காரியசித்தியின் அறிகுறி. வேதம் மற்றும் புராணங்களில் பசுவின் உடலுள் அனைத்து தேவர்களும் புண்ணிய தீர்த்தங் கள் நிறைந்து இருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. அதன் அனைத்து மயிர்க்காலிலும் முப்பத்து முக்கோடி தேவர்களும் வசிப்பதாகவும் கூறப்பட்டிருக்கிறது.

பசுவின் உடல் புண்ணியத்தின் விளைநிலம்; பசுவின் உடலில் உள்ள மதிப்பற்ற சாணமும் புனிதமாகவும், திருமகளின் இருப்பிடமாகவும் மதிக் கப்படுகிறது; அதன் அருள் பெற்ற பின், அனைத்து நற்செயல்கள் யாகம், வேள்வி, பூசை முழுவதும் தூய்மையடைகின்றன. புனிதமும் மங்கலமும் கூடி சித்தியடைகின்றன.

இதைப்பற்றி, கல்ப கிரந்தங்களின் தொடக்கத்திலே தர்க்கபூர்வமாகவும், யுக்தி பூர்வமாகவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதைப்போல, கோமூத்திரத்தை புனித கங்கை நீருக்கு இணையாக இன்றும் மதித்து வருகிறார்கள். ஆயுர்வேதத்தில் இதன் பொருட்கள் பற்பல மருந்துகளாகப் பயன்படுத்தும் முறை சொல்லப்பட்டு இருக்கிறது. இப்போதும் அப்படியே பயன்படுத்தி வருகின்றனர்.

தேவர்கள் வேள்வித் தீயின் மூலம், அன்னம், தானியம், அரிசி, போன்ற திரவியங்களை மரியாதையோடும் உற்சாகத்துடனும் பெற்றுக்கொள்கின்றனர்; ஆனால், இவைகள் பசுஞ்சாணத்தின் எருவாலும் காளைகள் பூட்டிய ஏராலும் உழப்பட்ட நிலத்தில் விளைந்திருக்க வேண்டும் என்பது மிக முக்கியம். சற்று ஆழ்ந்து சிந்தித்தால், பழங்கால வேத நெறிமுறைகள், அன்றாட தேவ பூசைகள்-முழுவதும் மந்திரம் மற்றும் பசு இனத்தின் மூலம் உற்பத்தியான திரவியங்களில் நன்னிறைவு அடைந்து இருக்கின்றன என்பதும் நற்பயன்கள் விளைகின்றன என்பதும் புலனாகும்.

பசுவின் பொருட்கள் பால், தயிர், நெய், முதலியவை இல்லாமல் வேள்விகள் நடைபெறாது. இதனால் பசுதிரவியங்கள் மற்றும் யாகங்கள் இல்லாமல் உலகத்தில் எதுவும் நிகழாது; உலகத்தின் வளர்ச்சி தடைபடும். இது எல்லோருக்குமே நன்கு தெரியும். வேத புராணங்களில் பசு விருத்திக்காகத் தனிப்பட்ட கவனம் செலுத்தப்பட்டதாக தெரியவருகிறது. படைப்பின் ஆதாரமாகவும் அனைத்து உலகச் செயல்களை நிகழ்த்துவதுமான பொருள் 'பசுதான்' என்று பல புராணங்களில் தெளிவாகச் சொல்லப்பட்டு இருக்கிறது. பூமியையும் லோகத்தையும் பேணிக்காக்

கும் பிராமணர், வேத சாஸ்திரங்கள், கற்புடை மகளிர், சீரிய நற்பண்புள்ளோர், அவாவற்றோர், தானசீலரான சாது, மகாத்மா, மகாபுருஷர்கள், இவ்வரிசையில், தன் நிகரற்ற சிறப்பைக் கருத்திற்கொண்டு, முதற்படி யாக சொல்லப்படுவதே பசுதான்.

**உலகை காக்கும் உன்னத அந்தணர்**
**உய்மறை நூல்கள், உத்தம மகளிர்**
**நற்பண்பாளர், நல்லவர், வள்ளல்**
**இந்த வரிசையில் இன்பசு முதலே!**

***(மகாபாரதம், சிவபுராணம்)***

பசுவை தரிசித்தல், பூசை செய்தல், வணங்குதல், வலம் வருதல், புண்ணாக்கு-புல் கொடுத்தல், கீரைய ளித்தல், கழுநீர் ஊற்றுதல், நீர் அளித்தல் முதலிய சேவைகளின் மூலம் மனிதனுக்கு கிடைத்தற்கரிய சித்திகள் கை கூடுகின்றன. இதன் உதாரணமாக, ஸ்ரீகிருஷ்ணன், பஞ்ச பாண்டவர்கள், திலீப மகராஜா மற்றும் ரகு குலத்தில் வந்துதித்த அனைத்து ராஜாக் கள், மகரிஷி வசிஷ்டர் அனைவரையுமே சொல்ல லாம். கோசேவையின் காரணமாக இவர்கள் விசேஷ சித்திகள் பெற்றிருந்தார்கள். இதற்கு இதிகாசங்களே நற்சான்றுகள்! கோசேவையால், பெறுவதற்கு அரிய சித்திகள் மனவிருப்பங்கள், விரைவிலேயே கைகூடு கின்றன. ஏனென்றால் அதன் உடலில் எல்லா தேவர்கள், ரிஷிகள், முனிவர்கள் மற்றும் கங்கை போன்ற புண்ணிய நதிகளின் அம்சம் நிறைந்திருக்கி றது. கோசேவையால் மகாவிஷ்ணு மிகவும் உள்ளம் குளிர்கிறார். கோசேவையால் எளிதில் கோ-லோகத்தை நாம் அடையலாம். எனவே, எல்லா முனிவர்கள், மகரிஷிகள், தருமநெறியில் கோசேவை யைத்தான் பிரதானமாகவும், மிகச் சிறந்ததாகவும்

வலியுறுத்தியிருக்கின்றனர். ரிஷிகளின் சீடர்களும் அவர்களது குடும்பத்தாரும் மிகச்சிறந்ததான கோசேவையால் மிகவும் ஆர்வம் பாராட்டி வந்திருக்கின்றனர். எனவே, அவர்களது பெயரால் வெவ்வேறான கோத்திரங்கள் விளங்கின. ஆனால், அனைத்து மக்களுக்கும் கோசேவை-கோபக்தி இன்றியமையாத தருமமாக மதிக்கும் ஒருமித்த வழக்கம் இன்றும் நிலவிவருகிறது. 'கோத்ரம்' என்பதன் பொருளே குருவின் பசுக்களை எல்லாவிதமான துக்கம்-வருத்தத்தில் இருந்து காத்தல், போற்றுதல் மேலும் வழிவழியாக வரும் வழக்கத்தைக் கைவிடாமல் தொடர்ந்து சேவை செய்தல். பாரத பூமி முழுவதும், பசுபக்தர்களும் பசுக்குப் பணிபுரிவோரும் பரவியிருந்தார்கள். மேலும் இதனால் தேசத்தில் சர்ச்சைக்கே இடமில்லாமல், இன்பம்-அமைதி, மெய்ஞானம்-விஞ்ஞானம் இரக்கம், தனதானியம், வைர-வைடூரியங்கள் எல்லாம் நிறைந்து இருந்தன என்பது புலனாகும். இக்கோசேவையின் பலனாக ஜகத் குருவான கண்ணபிரானின் பாதையை நெடுங்காலம் வரையில் அவர்கள் பின்பற்றி வந்திருக்கின்றனர்.

உலகின் தொன்மையான இலக்கியங்களான வைதிக சம்ஹிதைகள், பிராமணம், ஆரண்யகம், உபநிடதம் முதலான எல்லா வைதிக நூல்களின் பெரும் பகுதிகளில் கோ-மகிமை, கோ-ரட்சணம், மற்றும் கோ-பரிபாலணம் முதலியவற்றின் பற்பல நுணுக்கங்களை வெளியிட்டிருக்கிறார்கள். அவைகளில் பலவிதமான மங்கலச் செல்வத்தைச் சேர்க்கக்கூடிய பசுக்களைப் பட்டியல்படுத்தி இருக்கிறார்கள். வேதங்களின் விரிவுரைகளான இதிகாச புராணங்கள், தரும சாஸ்திரங்கள் போன்றவற்றில் கூட, பசுவின்

மகிமையைப் பற்றி கணக்கற்ற விஷயங்கள் கிடைக்கின்றன. கோசேவையின் காரணமாக பலர் தலைசிறந்த சிறப்பு அடைந்திருக்கிறார்கள். மாறாக, பசுக்களைத் துன்புறுத்தலால் தாழ்ச்சியும் அதன் காரணமாக பெறப்படும் வருத்தத்தையும் கூட தெள்ளத் தெளிவாக்கி உள்ளனர். மகாபாரதத்தில் 'வைணவ தருமம்' என்ற ஒரு நெடிய பர்வத்தில் கோமகிமையைத்தான் விளக்கமாக சொல்லியிருக்கிறார்கள். அதில் விஷ்ணு தருமத்தின் விளக்கமும், மற்றும் விஷ்ணு தர்மோத்தர புராணம், அக்னி புராணம் முதலியவைகளில் இனிமையாக வசீகரிக்கும்படி சிரத்தையோடு கூடிய வேத சூக்திகளில் பிரம்ம சொரூபமும், கோமகிமையும் நிரூபணமாகி இருக்கின்றன. இவ்விதமான விஷயங்கள் இதிகாச புராணங்களில் மிகவும் விரிவாக விளக்கப்பட்டிருக்கிறது. அவைகளில் 'கோமதி வித்யா'' எனும் மந்திர ரூபமான கோஸ்துதி உள்ளது. இதைத் துதிப்பதால் வீடு, சமுதாயம், நாடுகளில் ஆநிரை பெருகுகிறது. மேலும் தயிர், நெய், பால் போன்ற விலையொணா திரவியங்கள் பெருக்குறுகின்றன. இதனால், எல்லாவிதமான செழிப்பும் அமைதியும் கிடைத்து வருகிறது. இதனால் தேவர்களும் உலகின் அனைத்து உயிரினங்களும் மிகவும் மகிழ்வு அடைகின்றன. இதை பாராயணம் செய்பவர்களிடம் செழிப்பும் வனப்பும் கூடுகிறது. அவர்களுக்கு அற்புத ஞானம் கிடைக்கிறது. இவைகளோடு, மேலுலகின் தலைசிறந்த பரமபதத்தின் கோலோகத்தையும் அவர்கள் எளிதில் அடையலாம்.

புராணங்களில் பற்பல இடங்களில், அக்னி புராணம் முதலியவற்றில் 'கோமதி வித்யா' என்ற பெயரில் இது துதிக்கப்பட்டாலும், விஷ்ணு தர்மோத்த

ரபுராணத்தில் பரக்கப் பேசப்பட்டுள்ளது. இந்தப் பகுதியை முழுவதுமாக விளக்கிச் சொன்னால் மிக இன்றியமையாத பல விஷயங்கள் தெரியவரும். மேலும் இதனால் பசுக்களின் எல்லா சிறப்புகளும் புலனாகும். ஆனால் இங்கு விரிவாக இல்லையென்றா லும் அதன் மூலப்பகுதியையும் அதன் எளிமையான மொழி பெயர்ப்பையும் இங்கு கொடுக்கிறோம்:-

ஆநிரை அமுத உற்று! அன்னைக்கு நிகராம்!
தூய, மங்கள நல் நாற்றித்தின் பிறப்பிடம்!
வாசனைக் குங்கலியம்! வாழுயிர் உறைவிடம்!
வீடு, இன்ப, பொருள் வளரறத் தோற்றுவாய்!

நீடு சக்தியளிக்கும் நல்லுணவுகளின் மூலம்!
நாடும் தேவருக்கீயும் நிறையவிசுக் காரணம்!
ஈயுமவ்வலிசினால் அமரரை மகிழ்விக்கும்!
வாழ்வல் முனிவரின் வேள்விக்கும் பயன்படும்!

தூய்மைக்குத் தூய்மையாய், சீர்நலன் தோற்றமாய்
தாள் புகுந்தோருக்குத் தஞ்சமாய்த் திகழும்!
தேவ லோகத்தைச் சேர்த்திடும் படிக்கள்!
பூவுலகத்தின் பைம்புனிதக் காரணி!

நான்முகன் செல்வியே! நாற்புறமெங்கிலும்
தீதற சூழ்நிலை கூட்டிடும் சீவனே!
ஓங்குசீரிலக்குமி, உறைந்திடும் தேனுவே!
பூங்குவளைவாசம் பொலிவதால் வணங்கி னோம்!

ஆவினம், அந்தணர், ஓர்குலப் பிரிவுகள்
சாத்விகப் பண்புடன் சாத்திர மவிசுகள்
ஆதிமுதல் உயிரினம் அனைத்துமே உகந்திடும்
நீள்புவிப் படைப்பில் நிலைப்பதிப் புனிதமே!

தேவர்கள், அந்தணர், ஆவினம், சாதுகள்
தேமொழிப் பூவையால் மேதினியோங்குமே!
ஈவகை யுயிர்களைக் காக்குமிவ்வாவினம்!
பூசைகளிதற்குப் பூணுவோம் யாவரும்!

நீர்நிலையொன்றினுள் 'ஆ'முகம் பட்டிடின்
தீர்ந்திடும் வறட்சி! திரிவேணியாகிடும்!
பூலோக கங்கைகள் பொலியுமிவ்மேனியுள்!
காலடி பட்டால், கனிமவளம் கூடிடும்!
சாணியுள் திருவுண்டு; நாலறனுடனுண்டு;
ஞாலத்துச் சீலர்காள்! ஆவினம் போற்றுவீர்!

*(விஷ்ணுதர்மோத்தர புராணம்*
*தி.க.42/49-58)*

ஜலாதிநாத் வருணின் புத்திரர், புஷ்கர்-தீபத்தின் அரசர்; அனைத்து சாஸ்திரங்களில் வல்லுநர்; புஷ்கர், ஸ்ரீபரசுராமர் விரும்பிக் கேட்டதினால் இந்த (கல்வி) வித்தையை உபதேசம் செய்தார். 'எல்லா பாவங்களினையும் அறவே போக்கும் கோமதி-வித்யாவை நான் இப்போது உபதேசிக்கிறேன். இதை முழுமனதுடன், கவனத்துடன் கேட்க வேண்டும்.

''பசுக்கள் என்றென்றைக்கும் ஊற்றுவடிவம்! பசுக்கள் நமக்கு முதன்முதலான தாய். இவை மங்கலகரமான, புண்ணியமயமான சிறந்த குங்கலியத்தின் வாசனையைத் தரக் கூடியவை. இந்தப் பசுக்களின் காரணமாகத்தான் அனைத்து உயிரினச் சமுதாயம் இயங்குகிறது. எல்லாவிதமான மங்களம் மற்றும் தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் (அறம், பொருள், இன்பம், வீடு) போன்றவற்றினைப் பேணிக்காப்பவை இவையே! அனைத்துச் சிறந்த விளைபொருள்களின் உற்பத்தியைக் கொடுக்கும் மூல காரணம் இப்பசுக்களே! எல்லா தேவர்களின் உணவான அவிசு,

புரோடாசம் ஆகியவற்றின் விளைநிலம் இவையே! இவைகளை ஸ்பரிசிக்கும், தரிசிக்கும் காரணத்தா லேயே எல்லா உயிரினங்களும் களங்கமற்று தூய்மை யானதாக ஆகிவிடுகின்றன. பால், தயிர், மற்றும் நெய் முதலிய அமுதமான பொருட்களை அள்ளிக் கொடுக்கும் வள்ளல்கள் இவைகள்! இவைகளின் கன்றுகள் வலிமை மிக்க எருதுகளாகி அனைத்து சுமைகளையும் சுமக்கின்றன. மேலும் அன்னங்களின் உற்பத்தியை சுமந்து இடப்பெயர்ச்சிக்குப் பெரிதும் பயன்படுகின்றன. அத்துடன் மட்டுமல்லாமல் வேத மந்திரங்களின் புனிதமான அவிசுகளின் மூலமாக சொர்க்கத்தில் இருக்கும் தேவாதி தேவர்களை மகிழ்வ டையச் செய்கின்றன. ரிஷி முனிவர்களின் இருப்பிடங் களில், யக்ஞங்கள் மற்றும் புனிதமான அக்னிஹோத் ரம் முதலான ஆகுதிக்காக பால், நெய், தயிர் ஆகியவை பயன்படுகின்றன. (எனவே, நம் முன் னோர்கள் பசுக்களை தனிக்கவனத்தோடு பராமரித்து வந்து இருக்கிறார்கள்) எல்லா உயிரினங்களும் புறக்கணிக்கும் போதிலும் பசுக்களே இவ்வுலகத்திற்கு அடைக்கலன் கொடுக்கின்றன. புனிதமான பொருட்க ளில் பசுக்களே மிகவும் பவித்திரமானவை. மேலும், எல்லாத் தரப்பட்ட அனைத்து மங்கலகரமான பொருட்களின் காரணியே பசுக்கள்தான். சொர்க்கத் திற்கு பசுக்களே நிதர்சனமான படிக்கட்டுகள்! எல்லாச் செல்வங்களின் வளத்திற்கும் தொன்மையான மூலமாக தொன்றுதொட்டு பசுக்களே நிலவி வருகின்றன! திருமகளின் இருப்பிடமாக இயங்கும் பசுக்களுக்கு வணக்கம்! சுரபிக்களான, சுத்தமான, சரளமான, மற்றும் சுகந்தமான பசுக்களுக்கு வணக்கம்! பிரம்மா வின் புத்திரிகளான பசுக்களுக்கு வணக்கம்! உள்ளும் புறமும் எப்போதும் புனிதமாகவும் மங்கலகரமான அனைத்து சூழ்நிலைகளைச் சுத்தமாகவும் பவித்திரமா கவும் மாற்றும் பசுக்களுக்கு பலபல வணக்கம்.

உண்மையிலே பசுக்களும் பிராமணர்களும் ஒரே இனம்! இரண்டிலும் தெள்ளத்தெளிவான சாத்விகம் நிறைந்து இருக்கிறது. அந்தணர்களில் வேதமந்திரம் ஓதுதற்கும், பசுக்கள் அவ்வேள்வியால் அவிசிற்காக வும் படைக்கப்பட்டன! இவ்விரண்டின் காரணமாக வேள்வி நிறைவுற்றதும், விஷ்ணுவும் மற்ற தேவர்க ளும் அனைத்து உயிரினங்களும் மகிழ்ச்சி அடைகின் றனர். இவ்வனைத்து உலகமும், சத்துவத்தால் பரிபூர் ணமான தேவர்கள், அந்தணர்கள், பசுக்கள், சாதுக் கள், சான்றோர்கள், மகாத்மாக்கள் மற்றும் கற்புடைமக ளிர் போன்ற தத்துவத்தின் ஆதாரமாகத்தான் இன்ன மும் பிறழாமல் இயங்கி வருகிறது. இந்த ஆநிரை உயிர்கள் அனைத்து உலகையும் தரித்து இருக்கின்றன! எனவே இவை என்றென்றும் வந்திக்கத்தக்கவை. எந்தெந்த நீரோடைகளில் பசுக்கள் நீரைப் பருகுகின்ற னவோ, எவைகளைக் கடந்து செல்கின்றனவோ அவைகளில் கங்கை, யமுனா, சிந்து, சரஸ்வதி முதலிய புண்ணிய நதிகளின் அம்சம் கலந்து விடுகின்றது. பசு என்ற புண்ணிய தீர்த்தத்தில் கங்கை உட்பட புண்ணிய நதிகளின் அம்சம் சேர்ந்து இயங்குகிறது. பசுக்களின் ஒவ்வொரு உயிரணுக்களி லும் இடைவிடாத விருத்தியடையும் இயற்கைத் தத்துவம் நிறைந்திருக்கிறது! எண்ணிலா ஆற்றல் மண்டி இருக்கிறது! பசுக்களின் சாணத்தில் சாக்ஷாத் லட்சுமி எப்போதும் வாசம் செய்கிறாள். இவைகளை வணங்குவதால், சௌசம்(தூய்மை), தயை, சத்தியம், தபஸ் என்ற நான்கு பாதங்களுடன் கூடிய பூர்ண தர்மம் செழித்தோங்குகின்றது! எனவே, புத்திமான்கள் மங்களத்தை விரும்பும் புருஷர்கள், பசுக்களை என்றென்றும் வழிபடவேண்டும்!



# தர்மத்தின் தியாக வேள்வியில்

## (முற்றிலும் உண்மையான மயிற்கூச்செரியும் சம்பவம் - கி.பி. 1947ல் நடந்த நிகழ்ச்சி)

(எழுதியவர்: பக்த ஸ்ரீராம் தாஸ்ஜி)

பாரதமாதாவைக் கண்ட துண்டமாகச் செய்து, பாக்கிஸ்தான் தனி நாடு கேட்ட போது, பஞ்சாப், சிந்து, வங்காளத்தில் இஸ்லாமிய வெறியர்கள் இந்துக்களை அடித்து நொறுக்கினர்; கிராமங்களைத் தீக்கிரையாக்கத் தொடங்கினர். இந்துக்களைக் கத்தி முனையில் மதம் மாற்றிக் கொண்டிருந்தனர். மறுத்த வர்களை மரணப்படுக்கையில் கிடக்க வைத்துக் கொண்டிருந்தனர்.

பஞ்சாப் கிராமத்தில் (டஹல்ராம்) இஸ்லாமியர் இந்துக்களை கொடுமைப்படுத்த ஆரம்பித்தார்கள். தீவிரவாதிகளின் ஒரு குழு இந்துக்களின் வீடுகளை முற்றுகையிட்டது. ''கலமா படித்து இஸ்லாமியராக மாறுகிறாயா, இல்லை கத்திக்கு இரையாகி உன் வாழ்வை முடித்துக் கொள்கிறாயா?'' என்று மிரட்டல் உருட்டல் அதிகமானது. அப்பாவி இந்துக்களால் என்ன செய்ய முடியும்? சக்திமிக்க இந்துப்படை உருவாகும் வரையில் கலமா படிப்பது போன்று பாசாங்கு செய்தல் நலம் எனத் தீர்மானித்தனர். பெயரளவிற்கு கலமா படித்து இஸ்லாமியர் என்று சொல்லிக் கொண்டாலும், மனதில் 'ராம நாமத்தை'' ஜபித்து வந்தனர்.

''இந்த இந்துக்கள் நம்மை ஏமாற்றுகின்றனர். இந்து சேனை உருவாகிய பிறகு தப்பித்தோம் பிழைத்தோம் என்று ஓடி விடுவார்கள். இவர்கள்

அனைவரையும் பசுமாமிசம் சாப்பிட வைத்து இந்து மதத்தைப் புறக்கணிக்கச் செய்ய வேண்டும். அப்படி பசுமாமிசம் சாப்பிட மறுப்பவர்களைக் கொன்றுவிட வேண்டும்'' இவ்வாறு ஒரு குறும்புக்கார இஸ்லாமிய மத வெறியன்; இஸ்லாமியரின் கூட்டத்திடையே கூறிக் கொண்டு இருந்தான்.

''சரியான யோசனை! இவர்கள் அனைவரையும் பசுமாமிசம் சாப்பிடவைத்து சோதித்துப் பார்க்க வேண்டும்'' - அனைவருமே இந்த யோசனையை வரவேற்றனர்.

டஹல்ராம் கிராமத்தில் கவுரவமான இந்துத்தலைவர், பண்டிதர் பிஹாரிலால்ஜியிடம் இஸ்லாமியர் தெரிவித்தனர், ''நீங்கள் எல்லோரும் பசு மாமிசம் சாப்பிட்டு, இந்து தருமத்தைப் புறக்கணித்து இஸ்லாமியர் ஆகிவிட்டீர் என்பதை நிரூபியுங்கள். பசு மாமிசம் சாப்பிட மறுப்பவரை இஸ்லாமியர் அல்லர் என நினைத்து கொன்றுவிடுவோம்''.

பசுமாமிசம் இந்துக்கள் சாப்பிட வேண்டும் என்று இஸ்லாமியர் கூறுவதைக் கேட்டு பண்டிதர் பிஹாரிலால் இதயம் பதைபதைத்தது. தருமத்தைக் காப்பாற்றுவதற்காக உடல் பொருள் ஆவியை அர்ப்பணிக்கும் நாள் வந்துவிட்டதாக உணர்ந்தார். அப்போது அவர்கள் முன் தரும வீரர் ஹகீகத்ராய் மற்றும் குரு கோவிந்த சிங்குடைய பிள்ளைகள் இந்துத்தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக உயிரைத் தியாகம் செய்த சம்பவம் நிழலாடியது. தருமத்தைக் காப்பாற்றுவதற்காக உடலை பழுக்கப் பழுக்கக் காய்ச்சிய கம்பிகளைக் கொண்டு துன்புறுத்திய போதும், வீரர் பந்தா பைராகி திடமாக நின்ற நிகழ்ச்சி அவரது நினைவிற்கு வந்தது.

பசுவைக் கொல்லும் பாவிகள், தருமத்தை நாசப்படுத்துபவர்கள்; பகைவர்கள்; இஸ்லாமியரின் கொடூரக் கரங்களால் உயிர் துறப்பதை விட தானாகவே உயிர் துறப்பது மிக நல்லது என்று பண்டிதர் பிஹாரிலால் தீர்மானித்தார். ''நாங்கள் உயிருடன் இருக்கையில் எங்கள் சகோதரிகளையும் பெண்களையும் தூக்கிச் செல்லக் கூடாது; அவர்களது புனிதமான உடலை வெறியர்கள் தீண்டவே கூடாது, என மனதில் திடம் மேற்கொண்டார்; தக்கபடி திட்டம் தீட்டினார்.

பண்டிதர் நான்கு மணிநேர அவகாசம் தரும்படி கேட்டுக் கொண்டார். அனைவரையும் பசுமாமிசம் சாப்பிடவைப்பதாகவும் கூறினார். இஸ்லாமியர் ஏற்றுக் கொண்டு சென்றுவிட்டனர்.

பண்டிதர் வீட்டிற்குச் சென்று தன் குடும்பத்தார் அனைவரையும் அழைத்துக் கூறினார். ''இஸ்லாமிய மிருகங்கள் நமக்கெல்லாம் பசுமாமிசத்தை அளித்து நம்மை தர்ம நெறி பிறழ்ந்தவர்களாகக் கடுமையாக பலவந்தப்படுத்த இருக்கின்றனர். பசு மாமிசம் உண்டால் தர்ம நாசம்! இல்லையென்றால் நாமே நாசம்! சொல்லுங்கள் தருமத்தைக் காக்கும் உயிர்த்தியாகத்தை மேற்கொள்ளலாமா?''

எல்லா ஆடவர்-பெண்டிர் குழந்தைகள், வயதானவர் பயமில்லாமல் பதில் சொன்னார்கள், ''கோ-மாமிசம் சாப்பிட்டு பரலோகத்தை அடைய முடியாமல் இருப்பதை விட, தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக உயிர் துறப்பது மிக நல்லது. இந்த சூழ்நிலையில் மரணதேவியின் மடியே எங்களுக்கு மிகவும் விருப்பம், நாங்கள் தயார்'' என்றனர்.

பண்டிதர் பெண்களுக்கு கட்டளையிட்டார். ''விரைவில் அறுசுவை உண்டி தயார் செய்! இறைவனுக்கு உணவு சமர்ப்பித்து நன்றாக சாப்பிடுவோம்! பிறகு நல்ல துணி-அணிகலன்களை அணிந்து கொண்டு தர்மத்தைக் காப்பாற்ற உயிரை அர்ப்பணிப் போம்''. சொன்னதுதான் தாமதம். வகைவகையான உணவு சமைக்கப்பட்டது. உணவு தயாரானதும், பண்டிதரின் கட்டளைப்படி, சந்தோஷமாக உண்டனர்; நல்லுடை அணிந்து கொண்டனர்; அலங்காரம் செய்து கொண்டு, துணி அணிகலன்களை அணிந்து, ஒரே வரிசையில் சீராக நின்றனர். எல்லோரிடம் இணை யற்ற உற்சாகம் களை கூட்டியது. பசுவைக் காப்பாற்று வதற்காக, தருமத்தைக் காப்பாற்றுவதற்காக, சிரித்த வாறு கோலோகம் அடைவதற்காக விரைவாக மரண தேவியின் மடியில் கண்புதைக்க பண்டிதர் உட்பட அனைவரும் காத்துக் கொண்டு இருந்தனர். எல்லோ ரையும் ஒரே வரிசையில் நிற்க வைத்து, பண்டிதர் கூறினார்:- ''இன்று நாம் இந்துக்கள். நாம் இஸ்லாமி யர் ஆக மாற வேண்டும். பூசிக்கத்தக்க கோமாதாவின் மாமிசத்தைச் சாப்பிட வேண்டும்! இதைத்தான் இஸ்லா மியர் பெரிதும் வற்புறுத்திக் கொண்டு இருக்கின்றனர். இதற்காக நம்மை மிரட்டுகின்றனர். பசுமாமிசம் உண்டு இஸ்லாமியராகவில்லை என்றால், எல்லோரும் மாள வேண்டும் என்று பயமுறுத்துகின்றனர். நாம் எல்லோரும் நம் உயிருக்கு நிகரான தொன்மையான தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக, கோமாதாவைக் காப் பாற்றுவதற்காக, மகிழ்ச்சியுடன் உயிரை அர்ப்பணிப் போம்!''

எல்லோரும் இறைவனை பிரார்த்திக் கொண்ட னர். பண்டிதர் பிஹாரிலால்ஜி, கையில் துப்பாக்கி

எடுத்துக் கொண்டார். ஒரே மூச்சில் தன் தருமபத்தினி, மகள்கள், உற்றார் உறவினர், குழந்தைகள் எல்லோரையும் சுட்டு வீழ்த்தினார். ஒருவர் கூட 'ஐயோ, அம்மா!' என்று கூக்குரல் கூட இடவில்லை! புன்னகைப் பொலிவுடன் கோமாதாவைக் காப்பாற்ற, தருமத்தைக் காப்பாற்ற, எல்லோரும் தத்தம் உயிரை அர்ப்பணித்தனர். வீட்டுவாசலின் படிக்கோலத்தின் மேல் விண்ணுலகின் படிக்கட்டுகளை மிதித்தவாறு உயிரற்ற சடலங்கள் ஒன்றன்மீது ஒன்று வீழ்ந்து கிடந்தன.

இப்போது பண்டிதர் மற்றும் அவரது சகோதரர் இவ்விருவரைத் தவிர, அக்குடும்பத்தில் உயிருடன் ஒருவரும் இல்லை. இருவருள் முன் உயிர் துறப்பது யார் என்று போட்டி ஏற்பட்டது. ''முதலில் நீங்கள் என்னைச் சுடுங்கள்'' முதல் குரல் ''இல்லை இல்லை முதலில் நீ என்னைச் சுடு'' அடுத்த குரல். கடைசியில் இருவரும் கைகளில் துப்பாக்கியை எடுத்துக் கொண்டனர். எதிரெதிராக நின்று கொண்டனர். ஒருவர் மற்றவர் மீது குண்டை பாய்ச்சி மாய்த்துக் கொண்டனர். இப்படி அந்தக் குடும்பம் முழுவதும் தர்மத்தைக் காப்பாற்ற உயிரை அர்ப்பணித்துவிட்டது.

அக்கிராமத்து இந்துக்கள், பண்டிதர் பிஹாரிலால் ஜியின் குடும்பம் செய்த தியாகத்தைக் கேள்விப்பட்டனர். பண்டிதர் வீட்டு வாசலுக்கு வந்து உயிர்துறந்த தியாகிகளைப் பார்த்து அவர்களது ரத்தம் கொதித்தெழுந்தது. எல்லோருமே உயிரை அர்ப்பணிக்கத் தீர்மானித்தனர். இஸ்லாமிய துருக்கர்கள் வருவதற்கு முன், இந்துக்கள் சிலர் தீக்குளித்தனர். சிலர் கிணற்றில் குதித்தனர்; வீட்டு மாடியில் இருந்து கீழே சிலர்

வீழ்ந்தனர் இவ்வாறு எல்லா இந்துக்களும் உயிரை மாய்த்துக் கொண்டனர். எவருமே பசுமாமிசம் சாப்பிட முன்வரவில்லை!

கொடூர இஸ்லாமியர்கள் சிறிது நேரம் கழித்து மறுபடியும் இந்த டஹல் கிராமத்திற்கு வந்தார்கள். தெருவெல்லாம் இந்துக்களின் சடலங்கள் நிறைந்திருப் பதைக் கண்டு திடுக்கிட்டனர். பண்டிதர் பிஹாரிலால் வீட்டு வாசலுக்கு வந்தவுடன் பிணக்குவியல் இருப்ப தைக் கண்டு வாய்பிளந்து நின்று விட்டனர்.

என்னே மதப்பற்று!



# மேய்ச்சல் நிலம்

**(எழுதியவர்: 'கோ பக்த ரத்தினம்' சேட் நாராயணதாஸ்ஜி போத்தார்)**

ஒருமுறை, எங்கள் ரதலாமின் ஸ்ரீகோபால கோ சாலையில், காசியில் வசித்துவரும், ஆவினம் காக் கும் குணம் கொண்ட ஸ்ரீமத் நாராயண்ஜி மகராஜ் வருகை புரிந்திருந்தார். வழக்கம்போல் உபதேசம் செய்துக் கொண்டு இருந்தார். மேய்ச்சல் நிலத்தைக் கைப்பற்றும் மனிதருக்கு வந்துசேரும் பயங்கரமான பாவத்தைப் பற்றி குறிப்பாக விவரித்துக் கொண்டு இருந்தார்.

ஒருமுறை, ஒரு சண்டாளி, பிரேதம் எரிந்து கொண்டிருந்ததில், மனிதனின் மண்டையோட்டில் காக்கை மாமிசத்தை சமைத்துக் கொண்டு இருந்தாள் மேலும் அதை நாய்த்தோலால் மூடி வைத்திருந்தாள்.

இதைக் கண்ட ஒரு பெரியவர் அவளிடம் கேட்டார், ''வெறுக்கத்தக்க இப்பொருட்களை எதற்கு நீ மூடி வைத்திருக்கிறாய்?'' பதில் கூறினாள், ''மகராஜ்! இவ்விடம் உழும் நிலத்திற்கு அருகில் இருக்கிறது. பசுக்களின் மேய்ச்சல் நிலத்தைக் கைப்பற்றிய மகா பாவி யாரேனும் பார்த்துவிட்டால், என் உணவு புசிக்கத் தகாததாகிவிடும்.''

**நரசிர ஓட்டில் நீசக் குலத்தவள்**
**பறக்கும்காகப் புலாலதைச் சமைத்து**
**இறந்த நாயின் இழிதோல் போர்த்தி**
**கறவை நிலம் கவர்ந் தாரைத் தவிர்த்தாள்!**

பசுக்களின் மேய்ச்சலுக்காக நிலப்பகுதியை ஒதுக்குதல் மிகவும் புண்ணியம், மேய்ச்சல் நிலத்தை துவம்சம் செய்வது மகாபாவம். எனவே, எல்லோரும் முயன்று ஏதோ சிறிதளவு நிலப்பகுதியையாவது ஒதுக்குங்கள்; பசுக்களுக்காக சிறு நிலமாயினும் அல்லது அதில் சிறு பகுதியையாவது விட்டு வைக்க வேண்டும்.



# எங்கள் 'பூரி' பசுத் தாய்

## (உண்மைச் சம்பவம்)

(எழுதியவர்: ஸ்ரீ ஜகந்நாத் சித்ரகார்)

பல வருடங்களுக்கு முன் நடந்த நிகழ்ச்சி. எனக்கு 10-12 வயது இருக்கும். ஆனால் இந்நிகழ்ச்சி தெளிவான ஞாபகம். எங்கள் வீட்டில் 'பூரி' என்ற பெயரில் ஒரு பசு இருந்தது. பசு உலகில் வாழ வந்திருக்கும் சாதாரண மிருகமல்ல; மனிதர்களுக்காக

அவதரித்திருக்கும் கருணைமிக்க தேவியின் அம்சம்! இதை எங்கள் 'பூரி' பசு நிரூபித்தது. விடியற்காலையில், நல்ல பாலைக் கொடுத்து வெளியே செல்லும்; கழுநீர் புண்ணாக்கு வைப்பதோ, இல்லை மேய்வதற்காக எங்கேனும் அழைத்துச் செல்வதோ போன்ற எந்த வழக்கத்தையும் நாங்கள் அதற்கு ஏற்படுத்தவே இல்லை. பகல் முழுவதும் எங்கே மேய்ந்து கொண்டு இருக்கும் என்பதும் எங்களுக்குத் தெரியாது. எங்கே இருக்கும்? என்ன சாப்பிடும்? என்ன குடிக்கும்? இவையனைத்தும் எங்களுக்குத் தெரியவே தெரியாது. அந்தி நேரத்தில் வீட்டிற்குத் திரும்பும். மேலும் மிகவும் அன்போடு பால் சுரக்கும் இரவு நேரத்தில் அதைக் கட்டிப்போட்டு வைக்க மாட்டோம். வீட்டு வாசலில் சிறிது நேரம் அமர்ந்து இருக்கும். சிறிது நேரம் இங்குமங்கும் உலாவி வரும். குழந்தைகளாகிய நாங்கள் அம்மாவிடம் பால் பருகுவதுபோல் அதன் தனத்தில் வாய்வைத்து அமர்ந்தால், அதுவும் பேசாமல் நின்று கொண்டிருக்கும். அப்போது காலை சிறிதும் அசைக்க முற்படாது. ஏனென்றால் ஏதாவது காயம் எங்களுக்கு ஏற்பட்டுவிடப்போகிறது என்ற பயம்தான் அதற்கு ஏற்பட்டிருக்க வேண்டும்! இல்லை என்றால் அவ்வளவு சாந்தமாக எப்படி எங்களுக்கு பால் ஊட்டும்! இப்படிப்பட்ட பசுவை என்னவென்று சொல்லலாம்? நீங்களே யோசியுங்கள்... இன்று எப்போதெல்லாம் அதன் நினைவு எனக்கு வருகிறதோ, என் கண்கள் குளமாகின்றன.

அப்போது அப்பாவிற்கும், பக்கத்து வீட்டுக்காரக்கும் இடையே ஏதோ வழக்கு. நேரம் பார்த்து எங்கள் வீட்டு குழந்தைகளை அடிக்கும் சுபாவம் கொண்டவர் அப்பக்கத்து வீட்டார். எனவே, வெளியே சென்று

உலவி வர எங்களுக்கு அனுமதி இல்லை. சகோதரர்க ளில் என் அண்ணனுக்கு 16-17 வயது இருக்கும். இவன்தான் மூத்தவன், எனவே, வீட்டிற்குள்ளேயே விளையாடிக் கொண்டு இருப்போம். எங்கள் வீட்டுப் புழக்கடையில் சிறிது நிலம் இருந்தது. அதன் நான்குபுறமும் குட்டிச்சுவர்கள். ஏதோ சில கீரை-செடி கொடிகள் விளைந்திருக்கின்றன. சேப்பங்கிழங்கு பதியன் போட்டிருந்தார்கள். ஒரு மனிதன் முழுவதுமா கத் தன்னை எளிதாக மறைத்துக் கொள்ளும் அளவிற்கு அதன் இலைகள் அடர்ந்து படர்ந்து இருந்தன.

ஒரு நாள் நடந்த நிகழ்ச்சி அப்பா வீட்டில் இல்லை. இரவில் 4-5 திருடர்கள் குட்டிச்சுவர் வழியாக புழக்கடைக்குள் புகுந்து விட்டனர். கையில் லாந்தரை எடுத்துக் கொண்டு அம்மா பின்பக்கம் சென்றிருந்தார். அம்மாவைக் கண்டதும் திருடர்கள் மறைந்து கொண்டனர். இலைகள் அசைவதையும் ஓசையையும் கண்டு அம்மாவுக்கு சந்தேகம் வந்தது. விறுவிறுவென்று உள்ளே வந்து எங்களை எழுப்பி னார். எல்லோரும் எழுந்துக் கொண்டால் கூட எங்களால் என்ன செய்ய முடியும்? நாங்கள் சிறுவர்கள்தானே! திருடர்கள் என்று கேள்விப்பட்டவு டன் நடுநடுங்கினோம். அம்மா சொன்னவுடன் கம்பும் கழியுமாக திருடர்கள் முன் நிற்கக்கூட எங்களுக்கு தைரியமே இல்லை. ஆனால் ஒன்று எல்லோருமாக சேர்ந்து வெளியே சென்று ''திருடன் திருடன்'' என்று கூக்குரல் இட்டால் திருடர்கள் ஓடி விடுவார்கள், என்ற நம்பிக்கை இருந்தது. ஆனால் அப்போது எங்களுக்கு ஒன்றுமே தோன்றவில்லை!

பயப்படும் எங்களைப் பார்த்தவுடன் தாய் கூறினார், ''பயப்படாதீர்கள்''. அவருக்குத் திடீரென்று ஏதோ தோன்றியுள்ளதை எங்களால் புரிந்துக் கொள்ள முடிந்தது. வெளியே சென்று கதவைத் திறந்தார். வாசலில் பசு படுத்திருந்தது. அசைபோட்டுக் கொண்டு இருந்தது. அதைத்தட்டி எழுப்பினார். பசு உள்ளே வந்தது. எல்லா கதவுகளையும் திறந்துவிட்டு புழக்கடைக்கு அதை அழைத்துச் சென்றார். நாங்கள் எல்லோரும் ஒன்றன்பின் ஒன்றாக அதனைப்பின் தொடர்ந்தோம். 'பூரி மாதா!' என்று குரல் கொடுத்து இலைகள் அசையும் திசையில் சைகை செய்தார். பசு அப்பக்கம் பாய்ந்தது. திருடர்கள் கதி கலங்கினர். தப்பித்தோம் பிழைத்தோம் என்று தலைதெறிக்க ஓட முற்பட்டனர். ஆனால் அதற்குள் பூரி கொம்பால் முட்டியது; மோதியது; விரட்டி விரட்டியடித்தது. அப்போது அவர்களால் ஒன்றுமே செய்யமுடியவில்லை! 'பூரி' பசு, தேடித்தேடி அவர்களைக் கண்டுபிடித்து ஓடஓட விரட்டியடித்தது. முட்டிய முட்டலில், 'அப்பா அம்மா' என்று அலறத் தொடங்கினர். தப்பி ஓட முடியாமல் ''தாயே! பசுவை திரும்பவும் உங்களிடம் அழைத்துக் கொள்ளுங்கள். எங்களது இழியச் செயலுக்கான தண்டனை எங்களுக்கு கிடைத்துவிட்டது. இனி எங்கும் இத்தீயச் செயல்களை செய்ய மாட்டோம்'' என்று கூறினர். கதறலும், கெஞ்சலும் அம்மாவைக் கனியவைத்தது. தாய் ஆயிற்றே! பூரியை திரும்ப அழைத்து கொண்டாள். 'பூரி' பசு எங்கள் பக்கம் வந்தது. ஆனாலும் கோபப்பட்டுக் கொண்டிருந்த பசுவின் மூச்சு சூடாக இருந்தது. கண்களில் கோபம் தெரிந்தது. ''சண்டி'' தேவியாகவே பூரி காட்சியளித்துக் கொண்டு இருந்

தது. •தலையையும் கொம்புகளையும் அசைத்துக் கொண்டே இருந்தது. "என்னை ஏன் தடுத்தீர்கள்? அந்தத் துட்டர்களை நிக்ரகம் செய்து விட்டல்லவோ இங்கு வந்திருப்பேன்" என்று மவுன மொழியில் சைகை மூலமாக சொல்லிக் கொண்டு இருந்தது.

தாய் திருடர்களை நோக்கிக் கூறினாள், "நீங்கள் எல்லோரும் வந்த வழியிலேயே திரும்பிச் செல்லுங் கள். மறுபடியும் இந்தப்பக்கம் எட்டிக் கூட பார்க்காதீர் கள்". அவர்கள் எல்லோரும் தலைக் குனிந்து வணங்கி, குட்டிச்சுவரைத் தாண்டிச் சென்றனர்.

நாங்கள் எல்லோரும் பூரியின் முகத்தை அன்பு டன் நீவிக் கொண்டு இருந்தோம். அதன் நெற்றியைத் தடவிக் கொடுத்தோம். அதனால் 'பூரி' பசு அமைதி அடைந்தது! சிறிது நேரம் கழித்து, அது வெளியே சென்றது. நாங்கள் எல்லோரும் "பூரி-பசு"வைப் பாராட்டியவாறு உறங்கிப்போனோம்.



## கறவைத் திறனின் தேர்வு

(எழுதியவர்: ஷோளாபுர்
செயலாளர், பசு பராமரிப்பு சங்கம்)

பசு வளர்க்க வேண்டும் என்ற விருப்பம் இருந்த போதும் நல்ல பசு கிடைக்காமல், ஏதோ பெயரள விற்கு பசு என்று கிடைத்தால் கஷ்டத்திற்குள்ளாக வேண்டும்; வெறுப்புடன் "எல்லாவற்றிற்கும் அதிர்ஷ் டம் வேண்டும்" என்று அங்கலாய்த்துக் கொள்ள நேர்ந்துவிடும்! ஏனென்றால், பசு வாங்கும் போதும் அதன் 'கறவைத் திறன்' என்ன என்பதைப் பற்றி விளக்கமாக கேட்பதில்லை! இதைப்பற்றி அனுபவ

மும் நமக்கில்லாமல் போகிறது. இடையர்களுக்கு இது நன்கு தெரியும்; இதில் அவர்கள் நிபுணர்கள். ஆனால் வெளிப்படையாகக் குறையைக் கூற மாட்டார்கள். எனவே, அதைப்பற்றித் தெரிந்துக் கொள்ளுதல் நமக்கு மிகமிக அவசியம். சில நிபுணர்கள் இதைப் பற்றி அறிந்துக் கொள்ள வேண்டியவற்றைத் தொகுத் துக் கொடுத்திருக்கிறார்கள். நிபுணர்களாக இருப்பவர் களுக்கு இவ்விஷயங்கள் புதியவை இல்லை. மற்றவர் களுக்காக இங்கு வழங்குகிறோம்.



## 1. பசுவின் அருகே நின்று கூர்ந்து பார்க்க வேண்டும்

பசுவின் அருகே நின்று அதன் உருவத்தைப் பார்க்கவேண்டும். அதன் தோள்பட்டையில் இருந்து வால் வரை நீளமாக இருக்க வேண்டும் அதன் முதுகு வளைந்திருக்கக்கூடது. முதுகெலும்பு உயர்ந்து இருக்க வேண்டும். அதன் இரு பக்க உடற்பகுதியும் புஷ்டியாக இருக்க வேண்டும். வயிற்றுப்பாகம் பெரிதாக இருக்கும் அளவிற்கு அதன் வயிறு காலியாக இருக்கும்; அதிக உணவு உண்ணும். அந்த அளவிற்கு பாலும் அதிகம் சுரக்கும். குறைவாக உண்டு, வாங்கக் குடம் நிறைக்கும் பசுக்கள் இதுவரை எங்கும் பிறக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. வயிற்றின் விலா எலும்புகள் வெளியே தெரியும்படி இருந்தால், இன்னமும் தானியம், புண்ணாக்கு, நீர் அதற்கு கொடுக்க வேண்டும். பால் கொடுக்கும் பசுக்களின் உடலில் மாமிசம் அதிகமாக இருக்காது. ஏனென்றால் அது எவ்வளவு உண்டாலும் அதில் இருந்து பால்தான் அதிகம் கிடைக்கிறது. ஆமாம், கருவுற்றிருக்கும் காலத்திலும் புஷ்டியான உணவு

சாப்பிடக் கிடைத்தால் நிச்சயம் அது சத்துள்ளதாக இருக்கும். பசுவின் முகத்தில் கையால் நீவிப் பார்க்க வேண்டும். முகத்தோல் மென்மையாகவும் மெல்லிய தாகவும் இருந்தால் அவை சுப இலட்சணங்கள். ஒருவேளை கடினமாக இருந்தால் ரத்த ஓட்டம் சரியாக இல்லை என்பது பொருள். உரோமங்கள் அடர்த்தியாக இருந்தால் சரியாகப் பராமரிக்கப்பட வில்லை என்பது தெளிவு.



## 2. முதுகின் பின்புறம் நின்று பார்க்க வேண்டும்

முதுகின் பின்புறமாக நின்று பார்ப்பதனால் வயிற்றின் பருமன் கண்களுக்குத் தென்படும். முதலில் தெரிவது அதனது புட்டமும் நிதம்பமும். இவை அகலமாக இருந்தால், கருவுற்ற காலத்தில் தக்கபடி பராமரிக்கப்பட்டது என்பது புலனாகும். பசுவின் மடி பாகத்தின் முளைக்காம்புகளும் தெளிவாகத் தென்படும். பசுவின் தொடைகள் கனத்தும் தள்ளித் தள்ளியும் இருக்கவேண்டும். இந்தப் போதுமான இடைவெளியில் தான் தனங்கள் நடக்கும்போது தடைபடாமல் ஊசலாட முடியும். முளைக்காம்பினை ஒட்டி தனப்பகுதியின் மென்தோலில் மென்மையான நரம்புகள் புடைத்துக் காணப்படும் அளவிற்கு பால்வளம் மிக்க பசு அது என்பது எடுத்த எடுப்பில் நாம் சொல்லிவிடலாம். தனத்தின் முற்பாகத்தையும் நன்கு இங்கிருந்து கவனிக்க வேண்டும். 'தனம்' வயிற்றிற்கு சமமான விகிதத்தில் வளர்சியுற்று இருக்க வேண்டும். தொங்கிக் கொண்டு, அல்லது கொழுத்து இல்லாமல் இருக்க வேண்டும். மென் நரம்புகள் தெளிவாக தெரியவேண்டும். முன்னாலும் பின்னாலும் தனங்கள் வயிற்றோடு

ஒட்டியிருக்க வேண்டும். நாலு முளைக்காம்புகளும் ஒரே அளவில் பெரிதாகவும், பருமனாகவும் இருக்க வேண்டும். மிக மெல்லிய காம்புகளாக இருந்தால் கைவிரல்களுக்கு பிடிபடாமலும் போகும். கைவிரல் களுக்கு பிடிபடவில்லையென்றால் சுரக்கும் பாலும் குறைந்தே இருக்கும். மற்ற லட்சணங்களைத் தவிர, தனம் மற்றும் காம்புகளைத்தான் முதன் முதலில் நன்கு ஆராய்ந்து, அறிய வேண்டும். இதை முக்கியமாக கவனத்திற் கொள்ளவேண்டும்.



## 3. பசுவிற்கு முன் நின்று பார்க்க வேண்டும்

முன்னால் நின்று முகத்தைப் பார்க்கவேண்டும். அதன் தாடைகள், முகவாய் அகலமாகவும், கண்கள் ஒளிமிக்கவையாகவும் இருக்கவேண்டும். பசு ஸாதுவா, இல்லையா என்பதை முகத்தைப் பார்த்தே நாம் சொல்லிவிடலாம். பற்களைப் பார்த்து வயதைச் சொல்லிவிடலாம். பசுவின் கீழ்ப்பக்க தாடையில் 8 (பால்) பற்கள் உள்ளன. இரண்டு வருடம் கழித்து நடுவே உள்ள 2 (பால்) பற்கள் விழுந்து விடுகின்றன. அந்த இடத்தில் இரண்டு கெட்டிப் பற்கள் (நிலை யான) தோன்றுகின்றன. இப்படி ஒவ்வொரு வருட மும் இரண்டிரண்டு பற்கள் விழும். 5 வருடங்களுக் குள் பெரிய (நிலையான) பற்கள் முளைத்துவிடுகின் றன. 5-6 வருடங்களுக்குப் பிறகு, பசுக்கள் மூப்படை யும் போது இளைத்துப் போகின்றன, பற்கள் தேயத் தொடங்குகின்றன. மேல்தாடையில் பற்கள் இருப்பது இல்லை. கீழ்ப் பல் வரிசையினால் புல்லை பிடுங்கி மெல்கிறது. பின்னால் உள்ள கடைவாய் பற்களினால் நன்றாக அசைபோட்டு விழுங்குகின்றது.

பசுக்களின் காதுகள் மஞ்சள் நிறத்தவையாக இருந்தால் 'பசு நிறைய பால் தரக்கூடியது' என்று தெரிந்து கொள்ள வேண்டும். அதன் பாலில் வெண்ணெய் சத்து அதிகமாகக் கிடைக்கும். பசுவின் கழுத்து மெல்லியதாக இருக்க வேண்டும். அப்போது தான் போதுமான காற்றைச் சுவாசிக்க அது உதவி புரியும்; நோயின்றி வாழும். வயிற்றுப் பரப்பும் கண்களுக்குப் புலப்படும். பின்னங்கால்களைப் போலவே முன்னங்கால்களும் தள்ளித் தள்ளி இருக்க வேண்டும்.



## 4. முதுகினை மேலேயிருந்து கீழ்ப் பக்கமாக பார்க்க வேண்டும்

முதுகின் மேலிருந்து கீழே பார்ப்பதனால் வயிற்றின் வடிவம் மற்றும் பிருஷ்டபாகம் தெரியும். பிருஷ்டம் சரியாகத் தென்படக் கூடாது. பால்கொடுக்கும் பசுவாக வாங்கினால், எந்த இடைவெளியும் விடாமல், மூன்று நான்கு முறை நாமே பால் கறந்து பார்க்க வேண்டும். பால் கறக்கும் போது பாத்திரத்தில் 'சர்' 'சர்' என்று சத்தம் வருமானால் பால் வளம் மிக்க பசு என்பது சொல்லாமலே விளங்கும். இப்படித் தேர்வு செய்து விலைக்கு வாங்கலாம். தனத்தில் அதிகமான பால் இருந்தால், பாத்திரத்தில் கறக்கும் பால் பலமாக 'சர் சர்' என்ற ஒலியுடன் வெளிவரும். பால் அதிகமாக இல்லையெனில் காம்பில் இருந்து வெளிவரும் பால் மெல்லியதாகத்தான் இருக்கும். மேற்கத்திய முறையில் பசுவைத் தேர்வு செய்வதற்கு தனியொரு முறை இருக்கிறது.

1. முதுகினின்று பார்க்கையில், கழுத்தின் இருபுறங் களும் பின்பக்கமாக அகன்றவாறு இருந்தால், இது நல்ல லட்சணம். இவ்விதமான பசுக்களின் உதரம், குடற்பகுதி விரிவடைந்து இருப்பதாகக் கருதப்படுகிறது. இது வயிறார சாப்பிடத் தக்கது. நன்றாக ஜீரணித்துக் கொள்ளும் சக்தி கொண்டது.
2. பக்கம் நின்று பார்க்கையில், கழுத்திலிருந்து வால் வரை செழித்துயர்ந்தும், கழுத்திலிருந்து தனம் வரையான பாகம் இறக்கம் கொண்டதாகவும் இருத்தல் நலம். இவ்விதமான பசுக்களின் தனங் கள் புஷ்டியாக இருக்கும். பால் குறைவற்று காணப்படும். இதேபோல், கருப்பை விரிவடைய வும் போதுமான அளவிற்கு இடம் கொடுக்கிறது. இதனால் கன்றும் நல்ல வளர்ச்சியுற்று பிறக்கிறது.
3. முன்னால் நின்று பார்ப்பதால், இருபக்கங்களிலும் பசுவின் உடல் மேலிருந்து கீழ்வரை அகலமாக நீண்டு செல்ல வேண்டும். இதனால் கருவறைப்பா கம், இதயம் முழுமையாக விரிவடைந்தும், திடமா கவும் இருப்பதாகவும் கருதப்படுகிறது.

சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால், பக்கம் இருந்தோ இல்லை முன் நின்றோ பார்க்கையில், பசுவின் உடல் எல்லா கோணங்களிலும், செழிப் போடும் வனப்போடும், ஒருபக்கத்திலிருந்து மறு பக்கம் நுணுக்கமாகத் தோற்றமளிப்பதாகவும் (Triple wedge) காணப்பட வேண்டும். இந்த விதங்க ளில் பசுவின் தோற்றத்திற்குத் தக்கபடிதான் பால் சுரக்கிறது.



# பால்வளத்தைப் பெருக்க வழிகள்

1. ஒவ்வொரு நாளும் பச்சைப் பசும்புல் வயிறாரப் போட வேண்டும்.
2. பால் கறந்து அதற்கே ஊட்டவேண்டும்.
3. ஒருபங்கு வெல்லம் மூன்று பங்கு பார்லி கலந்து சமைத்து தினமும் உணவாக ஊட்ட வேண்டும்.
4. கோசுக்கீரையை உணவில் அதிகம் சேர்க்க வேண்டும்.
5. பப்பாளிக்காய், பப்பாளி இலை, அரைத்து வெல்லம் கலந்து கொடுக்கவேண்டும்.
6. இலுப்பப்பூ, புல் இவற்றோடு வெல்லத்தை நீரில் கலந்து கொடுக்க வேண்டும்.
7. கரும்பு துண்டுகளையும், அல்லது கரும்புச்சாறு எடுத்தபிறகு மீதமுள்ள சக்கையையும் கொடுக் கவேண்டும்.
8. ஆளி விதையின் பிண்ணாக்கு, கொதிக்க வைத்த பட்டாணி முதலியவற்றை கொடுக்க வேண்டும்.
9. கிஸாரி பருப்போடு கோதுமையைக் கொதிக்க வைத்துக் கொடுக்க வேண்டும்.
10. கொள்ளுதானியத்தை நன்றாகச் சமைத்து அல்லது இரவு முழுவதும் ஊற வைத்துப் போட வேண்டும்.
11. வெல்லம் மற்றும் கடுகைக் கலந்து போட வேண்டும்.

12. நெய், மைதா, வெல்லம் சேர்த்து சமைத்துப் போட வேண்டும். இதனால் பால் அதிகமாக சுரக்கிறது.

13. விதையோடு கூடிய வாழைப்பழத்தை அரிசியோடு கலந்து கொதிக்கவைத்து போடவேண்டும்.

14. பழுத்த அல்லது காயான வில்வத்தை கொதிக்கவைத்துக் கொடுக்க வேண்டும்.

15. பலாசப் பூ, இலுப்பைப்பூ கொடுக்க வேண்டும்.

16. ஈன்ற பின் மூன்றாம் நாள் பத்திய உணவு - உளுந்து சேர்த்து 5 தோலா உப்பு, இரண்டரை தோலா மஞ்சள், 5 தோலா திப்பிலிப்பொடி தண்ணீரில் கலந்து ஊற வைக்கவேண்டும். பிறகு, கால்பங்கு வெல்லம் சேர்த்து சுடச்சுட சாயங்கால நேரத்தில் உணவிட வேண்டும். இதனால் பால் அதிகமாகச் சுரக்கிறது.

17. 'சுரைக்காய்' கொடிகளின் நுனிப்பாகங்களையும் இலைகளையும் தீவனத்தில் கலப்பதனால் பால் பெருகுகிறது.

18. ஜீரகம்-10 பிடி, உப்பு-10 பிடி, சோம்பு-10 பிடி, லவங்கம்-4 பிடி, வெள்ளைச்சந்தனம்-2 பிடி, படிகாரம்-1 பிடி, பொட்டாசியம் நைட்ரேட்-1 பிடி இவைகளைக் கலந்து இடித்து வைத்து காலை மாலை இருவேளையும் ஒரு பிடி கொடுத்து வந்தால் பால் அதிகம் கிடைக்கும்.

19. மூங்கில் இலை இரண்டரை தோலா கொதிக்க வைத்து ஓமம் கொஞ்சம், வெல்லம் கொஞ்சம் கலந்து கொடுத்தல் பால் அதிகமாக சுரக்கும்.

20. ஈன்ற பிறகு பால் கட்டிப் போயிருந்தால் ஆமணக்குச் இலையினால் பால் காம்புகளை நீவி விடவேண்டும்.

21. அதிகம் பால் தரும் இனத்துப் பசு ஈன்ற காளையைத் தேர்ந்தெடுத்து, அதன் மூலம் சினைப்படுத்தினால், கன்று ஈன்றபின் பசு அதிகம் பால் சுரக்கும்.

22. பச்சரிசிக் குருணை, பருத்திப் பிண்ணாக்கு, தேங்காய்ப் பிண்ணாக்கு, ஆரியம், கம்பு, சோளம், தட்டைப் பயிறு, கோதுமைக் குருணை, கொள்ளு, மொச்சைப் பயிறு, வெந்தயம், வெல்லம், சுரைக்காய் இவைகளைக் கலந்து போடுவது தமிழ்நாட்டு வழக்கம். இது பால் வளமைக்கும், பசுவின் வளர்ச்சிக்கும் மிகவும் உதவும்.

*கற்றினம் மேய்த்த எந்தை கழலினை பணிமின் நீரே!*



# பசுவதையைத் தடை செய்வோம்!

பால் உற்பத்தியில் பாரதம் உலகின் மூன்றாவது இடத்தை வகித்து வருகிறது. காரணம் இங்கு ஏற்கெனவே பெருகி இருக்கும் ஆநிரைகள்தான். பால் உற்பத்தி மட்டுமின்றி நாட்டின் எரிபொருள் தேவையையும் அவை பூர்த்தி செய்கின்றன. அந்நியச் செலாவணியின் மோகத்தால், அரசாங்கம் பெருவாரியான கால்நடைகளை வெட்டும் திறன் படைத்த இயந்திரக் கசாப்புக் கூடங்களை (Slaughter Houses) அனுமதித்து வருகிறது. இது மிகவும் ஆபத்தான முயற்சி.

இதனால் நமது கலாச்சாரம், விவசாயம், பொருளாதாரம் இவற்றிற்கு எவ்வளவு பாதிப்பு ஏற்படும் என்பதை வாசக அன்பர்கள் சிந்தித்து பார்க்க வேண்டும். ஒரு பக்கம் காந்தியக் கொள்கைகளை ஆதரிக்கிறோம் என்று பாசாங்குப் பிரச்சாரம். மறுபுறம் பசுக்களை அழிக்கும் தீய முயற்சி.

''அகண்ட பாரதத்திலும் பசுவதை என்ற அநாகரிகமான, அழிவுச் செயலைத் தடை செய்வோம்'' எனும் குறிக்கோளை ஆட்சியாளர்களுக்கு ஏற்படுத்துவது நமது கடமை.

விவசாயப் பெருமக்களே! பாரத பண்பாட்டின் பேரன்பர்களே! பசுவதையை தடை செய்ய ஊக்கம் அளியுங்கள்! பசுமை வளம் பெருக பசுக்களைப் பேணி வளர்க்க உதவி அளியுங்கள்.!

Śrī Harī

# Our English Publications

Sri Ramacharitmanasa (With Hindi text and English translation)
Srimad Bhagavadgita Sadhak Sanjivani (By Swami Ramsukhdasji) (English commentary)
Srimad Bhagavadgita Pocket size, Volume I & II
Srimad Bhagavadgita—Tattva Vivechani With Sanskrit text and English translation (By Jayadayal Goyandka)
Srimad Bhagavadgita—The Gita A Mirror (Pocket size)
Bhagavadgita (With Sanskrit text and English translation) Pocket size
Bhagavadgita (Roman Gita with Sanskrit text and English translation)
Gita Madhurya English (By Swami Ramsukhdasji)
Benedictory Discourses (By Swami Ramsukhdasji)
Art of Living (By Swami Ramsukhdasji)
How to Lead A Household Life (By Swami Ramsukhdasji)
Be Good (By Swami Ramsukhdasji)
How to Be Self Reliant
Gems of Truth [First Series & Second Series) (By Jayadayal Goyandka)
Path to Divinity (By Hanumanprasad Poddar)
Look Beyond the Veil (By Hanumanprasad Poddar)
The Immanence of God